# இருபதின் கவிதைகளில் சமூகநீதிக் கோட்பாடு

முனைவர் து. சீனிச்சாமி



உலகத் தமிழாராய்ச்சி நிறுவனம்

# இருபதின் கவிதைகளில்
# சமூகநீதிக் கோட்பாடு

முனைவர் து. சீனிச்சாமி
இணைப்பேராசிரியர், இலக்கியத்துறை,
தமிழ்ப்பல்கலைக்கழகம், தஞ்சாவூர்



உலகத் தமிழாராய்ச்சி நிறுவனம்
INTERNATIONAL INSTITUTE OF TAMIL STUDIES
சி.ஐ.டி., வளாகம், தரமணி, சென்னை-600113

அமரர் ஆதித்தனார்
அறக்கட்டளைச் சொற்பொழிவு—3

(10, 11-5-93)

Amarar Athithanar Endowment Lecture—3

Endowment Lectures Publication No—45

## BIBLIOGRAPHICAL DATA


| | | |
|---|---|---|
| Title | : | Irupatin Kavitaikaḷil Camūka-nītik Kōṭpāṭu |
| Author | : | Dr. D. SEENISAMI, Associate Professor, Dept. of Literature, Tamil University, Thanjavur-613005 |
| Publisher & Copy right | : | International Institute of Tamil Studies, CIT Campus, Taramani, Madras-600113 |
| Publication No | : | 182 |
| Language | : | Tamil |
| Date of Publication | : | Feb 1994 |
| Edition | : | First |
| Paper used | : | Tamil nadu Creamove 16 kg |
| Size | : | 21X14 cms |
| Printing types | : | 10 point |
| No. of Copies | : | 1200 |
| No. of pages | : | VI + 110 |
| Price | : | Rs. 20/- |
| Printers | : | Kavinkalai Achagam 2/141 Kandhasami Nagar, Palavakkam, Madras-600041 Ph. No. 41 71 41 |
| Artist | : | Sathya |
| Subject | : | Theory of Social Ethics in the Poems of twentieth century |


* அறக்கட்டளைச் சொற்பொழிவாளர் கருத்துகளுக்கு நிறுவனம் பொறுப்பல்ல.

# பதிப்புரை

தமிழுணர்வு தலைப்பட்ட ஆதித்தனாரின் பெயரால் அமைந்துள்ள நிறுவன அறக்கட்டளையின் மூன்றாவது சொற்பொழிவு (10, 11-5-93) இந்நூல்.

இலக்கிய ஆய்வுகளும் காலத்திற்கேற்ப மாற்றமும் வளர்ச்சியும் காணும்; அவ்வாறு நிகழும் ஆய்வுகளே மொழியை வளப்படுத்தும் என்பதை உணர்த்துவதாக இந்நூல் அமைகிறது. சமூக அநீதிகளை எதிர்த்துக் கவிஞர்கள் எங்ஙனம் குரல் கொடுக்கின்றனர் என்பதை மிக ஆழமாக அணுகிக் கோட்பாடாக, இருபதாம் நூற்றாண்டுக் கவிதைகளை அடிப்படையாகக் கொண்டு நூலாசிரியர் முனைவர் து. சீனிச்சாமி வகுத்துத்தந்துள்ளார். புதுப்பார்வையில் ஆய்வு விருந்து படைத்துள்ள நூலாசிரியரை நிறுவனம் நன்றியுடன் பாராட்டுகின்றது. நூலுக்கு ஆசிரியர் அளித்த தலைப்பு 'இருபதாம் நூற்றாண்டுக் கவிதைகளில் சமூகநீதிக் கோட்பாடு' என்பதாம். சொற்சுவை கருதியும், ஆசிரியரே இருபது எனச் சுருக்கமாகக் கையாண்டுள்ளமையாலும் 'இருபதின் கவிதைகளில் சமூகநீதிக் கோட்பாடு' எனத் தலைப்பு மாற்றம் கண்டுள்ளது.

அமரர் ஆதித்தனார் அறக்கட்டளையை, 'ஆதித்தனார் கல்வி நிறுவனம்' வழி நிறுவனத்தில் ஏற்படுத்தியுள்ள அன்னாரது புதல்வர் திரு. சிவந்தி ஆதித்தன் அவர்கள்; அறக்கட்டளைச் சொற்பொழிவிற்கும் நூலாக்கத்திற்கும் துணைநின்ற நிறுவன இயக்குநர் (பொறுப்பு) முனைவர் அன்னிதாமசு அவர்கள்; மெய்ப்புத்திருத்திய திரு. சு. சண்முகவேலாயுதம்; சொல்லகராதி தயாரித்தளித்த ஆய்வாளர் திரு பு. பாலாஜி; சிறப்பாக அச்சிட்டுத் தந்துள்ள கவின்கலை அச்சகத்தார் ஆகிய அனைவருக்கும் நன்றி

**ச. சிவகாமி**

சென்னை-113 அறக்கட்டளைப் பொறுப்பாளர்
24-2-94 உலகத் தமிழாராய்ச்சி நிறுவனம்



# ஆசிரியர் அறிமுகம்

## முனைவர் து. சீனிச்சாமி (15-6-1944)

நெல்லைக் கட்டபொம்மன் மாவட்ட சிந்தாமணியை (புளியங்குடி)ப் பிறப்பிடமாகக் கொண்டவர்.

இலக்கியத்தில் இயற்கை (1977), தமிழில் காப்பியக் கொள்கை முதற்தொகுதி (1985) போன்ற ஆய்வு நூல்களைப் படைத்துள்ள இவர் கவிதை படைப்பிலும் வல்லவர். அந்தி (1974), உரித்த யானை (1980) என அவை வெளிப்போந்துள்ளன. சுமார் இருபது ஆண்டுகளுக்கு மேல் தமிழ் ஆய்வில் ஈடுபட்டுள்ள இவர் தமிழ்ப் புதினங்களில் உளவியல், கம்பராமாயணத்தில் இயற்கை (முனைவர் பட்டம்) போன்றவற்றை நிறைவுசெய்துள்ளார். சுமார் ஐம்பது ஆய்வுக் கட்டுரைகளையும் வரைந்துள்ளார். அவற்றுள் செம்பாதியன வெளிவந்துள்ளன. பல தேசிய கருத்தரங்குகளில் பங்கேற்றும், நிகழ்த்தியும் வரும் இவர் தற்பொழுது '1980-89 கால நாவல்களில் தனிநபர் நவீனமாதல் பிரச்சனைகள்' எனும் பொருளில் ஆய்வு செய்து வருகிறார்.

# நூன்முகம்

இருபதாம் நூற்றாண்டுக்கவிதைகளில் காணப்பெறும் சமூக நீதிக்கருத்துக்கள் பற்றிய, சிறிய ஓர் அறிமுகநூல் இது. இந்தக் கால அளவில் பல்வேறு கவிஞர்கள் பல நூறு கவிதைகள் எழுதியுள்ளனர். இவற்றில் காணப்பெறும் சமூகநீதி சார்ந்த,—பொருளாதார ஏற்றத்தாழ்வு, வறுமை, வேலையின்மை, சாதியம், பெண் விடுதலை, சமதர்மம், அந்நிய மாதல், அடையாளமிழத்தல்— போன்ற பல்வேறு உள்ளடக்கங்களை அப்படியே எடுத்துச் சொல்வது நூலின் நோக்கமன்று. மேலும், இந்த ஆய்வெல்லை யானது மிகவிரிந்த பரப்புடையது. ஒருபெரிய ஆய்வுத்திட்டமாக அமைத்துச் செய்யப்பெறுதற்குரியது.

இத்தகைய அகன்ற தளத்தில், சமூகநீதி உள்ளடக்கங்கள் கவிதையாகியிருக்கும் பல்வேறு தன்மைகள் அல்லது தடங்கள், அல்லது முறைமைகள்பற்றியே இச்சிறுநூல் விளக்குகிறது. இந்த நிலையில், சிலகவிஞர்கள் விடுபட்டிருக்கலாம்; இதுதவிர்க்க வியலாததுங்கூட. குறிப்பாகத் திரைப்படக்கவிஞர்கள் தவிர்க்கப் பட்டுள்ளனர். காரணம், திரைப்படச்சாதனப் பின்னணி என்ற நிலையில் அவற்றின் பரிமாணங்கள் பலநுட்பத்தன்மை கொண்டமை. அவைதனித்துவமான ஆராய்ச்சிக்கும் மதிப்பீட்டுக் கும் உரியன. மற்றபடி விட்டுவிடுதல் என்பது நோக்கமன்று. ஆகவே, பொதுவான கவிதைத்தடங்களுக்கேற்பப் பார்ப்பதுவே இங்கே மையமாகக் கொள்ளப்பட்டுள்ளது.

பொதுவாகவே, கவிதை ஒரு தனித்துவமானகலை என்பதும் அதற்கேயுரிய ஆற்றல்களை அடையாளம் காண்பது என்பதும் அதிகமாகக் கவனத்தில் எடுத்துக் கொள்ளப்படுவதில்லை. இந்தக் கவனத்துடன் ஆராய்வதில் இந்நூல் ஒரு முயற்சி எனலாம். இத்தகைய ஓர் அறிமுக நூலை எழுதிட நல்ல வாய்ப்பினை நல்கியது உலகத்தமிழ் ஆராய்ச்சி நிறுவனம். இந்த நிறுவனத்தின் பொறுப்பாளர்க்கு என் மனமார்ந்த நன்றி.

து. சீனிச்சாமி

# உள்ளே

# அறிமுகம்

## கலையும் சமூகமும்

"காலங்காலமாக, ஒரு குறிப்பிட்ட தோரணைக் குட்பட்ட இணைவுச்செயல் அமைவில், மாறுதல்களுக்குரியதாக, ஒரு குறிப்பிட்ட இடப்பின்னணியில் வாழும் ஒரு மக்கள் திரளையே சமூகம் எனலாம். இவ்வாறு அமையும் இணைவுச் செயலின் மூலம், ஒரு சமூகத்தின் மக்கள், தங்களுக்குள், மதிப்புகள் பற்றிப் பொதுவான ஏற்புமனம் பெறுகின்றனர். எவ்வெவ்வாறு நடந்து கொள்ளவேண்டும் என்பது பற்றிய பொதுவான கருத்து - ஏற்பு மனம் பெறுகின்றனர். மற்றும் குறிப்பான சில நடத்தை முறைமைகளையும் பொதுவாக்கிக் கொள்கின்றனர்." [1] ஆக, குறிப்பிட்ட சூழலில் குறிப்பிட்ட சமூகத்தர நிலைகளில் இப்படி இப்படி நடந்து கொள்ளவேண்டும் என்பதைக் கற்றுக்கொண்டு, ஓர் தோரணைக் குட்பட்ட இணைவுச் செயல்களில் ஒருவருக்கொருவர் கலந்து இயங்குவதே சமூகம் எனப்பெறும். சமூகம் பற்றிய இந்த விளக்கம்

---

1. George Ritzer, Sociology. p.12. (It is an abstraction, a concept that we use to summarise an on going, ever changing system of patterned interaction among a number of people......Through this interaction the people of a society arrive at a substantial amount of agreement about values, about the rules of appropriate behaviour, (called norms), about the proper behaviour for People (called roles) in different positions (called, statuses) society is a term or concept that encompases these elements).

கொள்கை நிலையில் (concept) பொதுவாகக் கூறப்பெறும் விளக்கமாகும். ஆனால், சமூகம் என்பது வரலாற்று நோக்கில் பார்த்தால் பல்வேறு மாற்றங்களுக்குட்பட்டு வந்துள்ளது.

ஆதி நாட்களில், நாகரிக முறைமைகள் உருவாகிப் பரவாத கற்காலங்களில் (stone Age) மனிதன் கூட்டாகவே தொழில் செய்திருக்கிறான். இத்தொழில்கள் அனைத்துமே அவனுடைய அடிப்படைத் தேவையான உணவு தேடலையே மையநோக்காகக் கொண்டிருந்தன. இந்நோக்கிலேயே ஆதிகால மனிதனின் இணைவுச் செயல்கள் அமைந்திருந்தன. கூட்டாக வேட்டையாடச் செல்வது, கூட்டாகக் குரலெழுப்புவது, ஏதோ ஒரு பேச்சுத் தோரணையில் ஒலி எழுப்பிப் பாடுவது, ஆடுவது—என எல்லா நடவடிக்கைகளுமே உணவு தேடலை மையமாக்கிய கூட்டுச் சடங்குகளாகவும் கூட்டு வேலை முறையாகவும் இருந்தன. ஆதி காலப் பொருளாதார வடிவமான உணவு தேடல், வேட்டை போன்ற நிகழ்ச்சிகள் வெற்றிகரமாகவும் நிறைந்தும் அமைவதற்கு நம்பிக்கையூட்டுகின்ற சடங்குகளாகவே ஆதி காலக் கலைகள் பெரும்பாலும் இருந்தன. சிறுபான்மை அழகுணர்வு சார்ந்தும் இல்லாமல் இல்லை. பயன்பாட்டு (utilitarian) நிலையை மீறி, விலங்குகளின் உயிர்த்துடிப்பைக் காட்டும் சில ஆதிகால ஓவியங்களும், எலும்பால் ஆக்கப்பெற்ற கருவிகளின் கைப்பிடிகளின் அழகமைப்பும் கற்கால மனிதனிடமும் அழகுணர்வு நிரம்பியிருந்ததை வெளிப்படுத்தும் ஆவணங்களாக உள்ளன.[2] ஆயினும், பொருளாதாரப் பின்புலத்திற்கேற்பக் கலைச் செயற்பாடுகள் அமைந்திருப்பதே, உலகின் தொல்கலைப்பண்பின் மிக முக்கியமான அமைப்பு எனலாம்.

கற்காலம் கடந்து, மெல்லமெல்ல வேளாண்மை வளர்ச்சி பெற்று, இருப்பு உலோகம் கிடைத்த பின்னணியில் வேளாண்மை உற்பத்தி பேரளவு ஆகி, மீதமாகிப் பெருகி வரும் சூழலில் கூட்டுப் பண்பாடு சிதையத் தொடங்கி விடுகிறது. நிலையாக ஓரிடத்தில் தங்கி பயிர் உற்பத்திக்காக நிலங்களைக் கவனிக்க வேண்டிய நிலையில், கருவிகளும் சிந்தனையும் உடன் வளர்ச்சி பெற்ற

---

2. Melville F.Horskolites எழுதியுள்ள Cultural Anthro-pology என்றநூல், Jaequetta Hawks எழுதியுள்ள History of mankind நூல் தொகுதிகள்-ஆகிய நூல்களில் இது பற்றிய விரிவான விளக்கங்கள் உள்ளன.

நிலையில் மனிதர்களின் பழைய கூட்டு வேலை முறை சிதைந்து, வேலைப்பிரிவினை ஏற்பட்டு இன்னாருக்கு இன்னவேலை என்ற சமூகநிலை உருவாகிறது. மறவலி படைத்தவர்கள் நிலங்களைத் தங்களின் உரிமைக் குரியதாக்கி உற்பத்தி செய்வதற்கு என்று ஒரு கூட்டத்தைத் தங்களின்றும் வேறாகப் பிரித்து அமைக்கின்றனர். உற்பத்திக்குத் தேவையான கருவிகளைப் படைப்பதற்கென்று சிலர் ஒதுக்கப் படுகின்றனர். இவர்கள் அனைவரும் எவ்வித முணுமுணுப்புமில்லாமல் தங்கள் வேலைகளைக் கடமையாக அல்லது கர்மவினையாகச் செய்து வர, மத நம்பிக்கை உருவாக்கப் படுகிறது. இம் மதப்போக்கினைக் கவனித்துக் கொள்ள என்றும் ஒரு குறிப்பிட்ட கூட்டம் ஏற்பட்டு விடுகிறது. இவ்வாறாகப் பொது உற்பத்தி முறையை ஒட்டி, மனித உறவுகள் சமூக உறவுகளாகப் பிரிக்கப்பெற்று, மனிதர்களிடையே தரநிலை வேறுபாடு உருவாகி விடுகிறது.

இந்த வேளாண்மை உற்பத்தி முறைமையோடு, பண்ட மாற்றுப் பணியில் ஈடுபடும் வணிகர்களும் உருவாகி விடுகின்றனர் வணிகர்கள் பல்வேறு பொருள்களைக் கடல்கடந்தும் பரிவர்த்தனை செய்வதில் ஈடுபடும்போது, வேளாண் நிலங்களுக்கெல்லாம் உரிமையாளராய் இருக்கும் அரசர்களுக்கு நிகரானவர்களாகவும் வளர்ந்து விடுகின்றனர். ஆனால் சமூகத் தரநிலை வேறுபாட்டில், உழைப்பில் ஈடுபடும் பல்வேறு உழைப்பாளிகளோ கீழடுக்கில் இருந்து விடுகின்றனர். மேலடுக்கில், உழைப்பில் ஈடுபடாமல் இருப்பவர்கள் அதிகார உரிமையுடையவர்களாக மாறி விடுகின்றனர். இத்தரநிலை வேறுபாடானது, இந்தியாவில், ஒவ்வொரு வேலைப் பிரிவினரையும் ஒவ்வொரு சாதியாராகப் பிரித்து வைக்கும் சமூகமுறைமை தோன்றக் காரணமாகி விடுகிறது.

சாதியமைப்பு சமூகத்தில் திட்டஞ் செய்யப்பெற்ற பின் அதுவே தனி ஒரு நிறுவனமாகி விடுகிறது. இதனுள் அடங்கும் குடும்ப அமைப்பு, கூட்டுக்குடும்பமாகி அதுவும் ஒரு நிறுவனமாகி விடுகிறது. கூட்டுக் குடும்பங்கொண்ட, பல்வேறு சாதிகள் (பல்வேறு வேளாண் தொழில்கள்—துணைத் தொழில்கள்) ஏற்படுத்திக் கொண்டு மக்கள் ஒரு குறிப்பிட்ட நிலவுடைமை மையத்தில் இணைவுச் செயலில், கலந்து வாழும் போது அதுவே ஒரு கிராமச் சமுதாயமாக உருப்பெறுகிறது. நாளடைவில் கிராமச் சமுதாயம் என்பது குறிப்பிட்ட சமூகத் தரநிலைகளை ஒழுங்கு

படுத்தும் நிர்வாக அமைப்பு கொண்ட நிறுவனமாக வலிமை பெற்று விடுகிறது. ஆகவே,

1. சாதியமைப்பு
2. கூட்டுக்குடும்பம்
3. கிராமச்சமுதாய அமைப்பு

ஆகிய மூன்றும் ஒன்றின்வழி ஒன்றுஇணைந்து, மக்களின்இணைவுச் செயலை உருவாக்கும் ஒரு நிலவுடைமைப் பொருளாதார—சமூக அமைப்பை உருவாக்கி விடுகின்றன.

இந்தியாவின் பழைய சமூகக் கட்டமைப்பினை விளக்கும் சமூகவியல் அறிஞர் எஸ்.திருமலை இந்திய சமூகம் என்ற பெரு மாளிகையின் (social edifice) அடிப்படையாக மேற்கண்ட மூன்று கூறுகளின் இணைவு நிலையைக் கூறுகிறார்.[3] இம்மூன்றுடன், இவற்றின் எல்லா நிலைகளிலும் பண்பாட்டு மதிப்புகளாக (values) ஊடுருவி, இம்மூன்று சமூக நிறுவனங்களையும் ஊன்றச் செய்கின்ற நங்கூரமாக மதக் கொள்கைகள் இருந்து வந்துள்ளன. இச்சமூகப் பின்னணிக்கேற்ப, பண்பாட்டு மதிப்புகளுக்கேற்ப அறிவுச் சிந்தனைகள் உருவாக்கப் பெற்றன. கலை இலக்கியப் படைப்புகளின் பிழிவுகளில் இந்தச் சமூகச்சார்பு வேர்களை நுட்ப மாகப் பார்த்தால் அடையாளம் கண்டு கொள்ளலாம். இருபதாம் நூற்றாண்டுச் சமூக மாறுதலை நிகழ்வித்த, ஆங்கிலேயர் அறிமுகப் படுத்திய தொழிலிய முதலாளித்துவம் (Industrial capitalism) பரவுவதற்கு முன்பு இந்தியாவில் (தமிழகத்தில்) இருந்த பழைய சமூகக் கட்டமைப்பின் பண்பாடு மற்றும் நிறுவனக் கூறுகள் இருபதாம் நூற்றாண்டின் தொடக்க நாள்களில் மிகுதியான மதிப்பீட்டுக்குள்ளாக்கப் பெற்றன. இதன் விளைவாகப் புதிய கருத்தியலின் வழியிலான இலக்கியப் படைப்புக்கள் உருவாயின.

---

3 S. Thirumalai, Trends in Rural change, Rural Socio -logy, Ed, by, A.R. Desai, p.691 (..........the caste, the joint family system and village administration through panchayats which together formed the base of the old social edifice)

**நீதி**

சமூகத்தின் பொருள் உற்பத்தி முறைமைக்கேற்ப தனிநபர்களின் இடமும் அவர்களின் பங்குநிலை நடத்தை முறைகளும் (Roles) தீர்மானிக்கப்படும் நிலையில், சில பங்கு நிலைகள் தொடர்ந்து ஒரே போக்கில் வரையறுக்கப்பெற்று ஒழுங்கு படுத்தப் படுகின்றன. இதனால் தரநிலை வேறுபாடு உருவாகிறது (மதிப்பு) உயர்நிலை இடம் பெற்று பங்குநிலை நடத்தை (Role behaviour) சார்ந்த உழைப்புப் பிரிவினைக்கேற்ப மேல்—கீழ் என்ற வேற்றுமைநிலை உருவாகி விடுகிறது.[4] உழைப்பில் நேரடியாக ஈடுபடும் மனிதர்கள் தரநிலையில் கீழ்நிலைக்குத் தள்ளப்பட்டு விடுகின்றனர். நிலமும் கருவிகளும் மேல்நிலையாளர்களின் ஆதிக்கத்திற்கு வந்துவிடும்போது, இயல்பாகச் சாதியமைப் பானது, ஒரு சிலரின் உயர்ந்த வாழ்க்கைக்காக வேறு சிலரைத் தாழ்ந்த வாழ்க்கை நிலையில் என்றும் வைத்திருக்கவும், எப்போதும் உடலுழைப்பால் உற்பத்தி செய்வதிலேயே ஈடுபட்டுக் கொண்டிருக்கவும், நிலையான சமூக ஒழுங்கு விதியை உருவாக்கி

---

4. 1 Karl Marx, Preface to A contribution to the Criticism of Political Economy [In the social production then life men enter into definite relations that are indis pensable and independant of their will, relations of production which correspond to a definite stage of development of their material productive forces.

The sum total of these relations of production constitutes the economic structure of society, the real foundation on which rises a legal and political super structure and to which correspond definite forms of social consciousness]

2. George Ritzer, Sociology, p. 43 - 44.

[A social structure is a set of interrelation ships that has a discernable form or shape and that has been evaded by people through their patterned interaction with one another...............when the prestige ranks of individuals in the group become reqularized, that is, when the nature and content of Interaction reflects a status ranking, then a group has begun to evolve a social structure...............we will generaily be referring to the patterned interactions of a society that reflect the hierarchical arrangements of economic, power, authority ethnic or racial group dimensions of the population]

விடுகிறது. சமூகத்தின் எல்லா மாந்தர்க்கும் பயனளிக்கக் கூடியதான பொது ஒழுங்கு முறை இல்லாமல் போய் விடுகிறது. சமூக அமைப்பு அநீதியை நிலை நிறுத்துகிற கருவியாகி விடுகிறது.

சாதி, மதம், கிராம நிர்வாகம் ஆகிய நிறுவன—மதிப்புகள், இந்த அநீதிக்குள்ளடங்கும் மனநிலைகளை வாழ்க்கை உண்மைகளாகத் தக்கவைக்கச் செய்யும் சக்திகளாகச் செயல்படுகின்றன. ஆகவே, சாதி அமைப்பைக் கொண்ட வேளாண் சமூகத்தில் நீதி என்பது சமூக மாந்தர்கள் அனைவருக்கும் சம உரிமை—சம மதிப்பு தரும் முறையில் அமையாமல் போய்விடுகிறது. நீதியுள்ள சமூகம் என்பது எது என்பது பற்றி ஒரு சமூகவியலாளர் கூறுவது இங்கே நினையத்தக்கது.

"ஒரே மாதிரியாக இல்லாமல் வேறுபட்ட தன்மைகொண்ட எல்லா மக்களுக்கும், பல்வேறு வழி முறைகளில் நியாயமாக அவர்களுக்குரியது வழங்கப் பெறும் முறையில் ஒருங்கமைக்கப் பட்டிருப்பதே நீதியுள்ள சமூகமாகும். பங்கீட்டு நீதியைச் செயல் படுத்தும் சக்திவாய்ந்த வழிமுறைகள் இருப்பதே நீதியுள்ள ஒரு சமூகத்தின் அடையாளமாகும். இந்தப் பங்கீட்டு நீதியைக் காப்பாற்றிட, சுரண்டல் என்பது அதன் எல்லா வடிவங்களிலும் இல்லாமல் குறைக்கப்பட வேண்டும்."[5]

ஆனால், இந்தியாவில் நீண்ட காலமாக இருந்து வரும் சமநீதி இன்மையானது, அடிப்படையில், பொருளாதார உற்பத்தி முறைமை சார்ந்த அதிகார அமைப்பு காரணமாக ஏற்பட்டதே ஆகும். இந்த அதிகார அமைப்பானது சாதி, மதம், போன்ற நிறுவனங்களால் நிலைநிறுத்தப்படுகின்றது என்பது பற்றி முன்னரும் விளக்கப் பெற்றுள்ளது. இந்த நிறுவனச் சார்பில் இந்து மதத்தின், இதனுடன் இணைவு கொண்டதாக அமைந்துள்ள

---

5. S.S Rangnekar, (Social Justice and Equality in India) A Post independence overview, p.2 [A just society is one in which the competing claims of unequal persons are sought to be reconciled, by a variety of means such that the social dividend is fairly distributed. Effective means for achieving distri -butive justice is the hall mark of a just society. In order to safeguard distributive justice, exploitation has to be minimised in all forms]

சாதி அமைப்பின் பங்கு பற்றி ஒரு சமூகவியலாளர் கூறுவது எண்ணிப்பார்க்கத் தக்கது:

"சாதி அமைப்பின் மூலம், இந்துமதம் அதி தீவிரமான சமமின்மையை வழங்கியுள்ளது. எனவே பழைய மரபு தான் சமமின்மையின் மூலமாக இருந்து வருகிறது. இதற்கு மதம் முழு அளவிலான ஏற்பினை வழங்கியுள்ளது, ஆகவே, சமத்துவத்தை நிலை நாட்ட வேண்டுமானால் மரபில்ருந்து முறித்துக்கொள்ள வேண்டியுள்ளது."[6]

இந்திய சமூக மெய்ம்மைகளை உணர்ந்து கொள்ள சமூக நீதி பற்றி, சி. சுப்பிரமணியபாரதி கூறும் கருத்தினை மனங்கொண்டு, பாரதி தரும் ஒளியில் நோக்குவது தெளிவைத் தரும் எனலாம். 'அக்டோபர் புரட்சியும் தமிழ் இலக்கியமும்' என்ற நூலில் ஆசிரியர் ரகுநாதன் பாரதியின் கீழ்க்கண்ட கருத்தை எடுத்துக் காட்டி விளக்கியுள்ளார்:

"மனித சமுதாயத்தின் உருவாக்கத்திலேயே நீதியை வெற்றி பெறச் செய்யவேண்டும். பின் நீதி எல்லா மானிட விவகாரங்களிலும் உறவுகளிலும் இயல்பாகவே வெற்றி பெற்றுவிடும். மனிதக் கூட்டுறவுகளின் கட்டுக் கோப்பில், போட்டிக் கோட்பாடு கொடி கட்டிப் பறக்கிற வரையில், நிலமும் நீரும் மனிதர்கள் எல்லோருக்கும் பொதுவான சொத்தாக இல்லாத வரையில் எவ்விதத்திலும் மனிதர்கள் தங்களது பொருளாதார உறவுகளில் மிருகங்களை விடவும் மோசமாகவே நடந்து கொள்வர். இந்த உண்மையைப் பெரும்பான்மையான மனிதர்கள் உணரும் போது நாம் நமது ஏறுமுகமான பரிணாமத்தில் அடுத்த அடியை வைத்துவிடுவோம்."[7]

நிலமும் நீரும் எல்லோருக்கும் பொதுவானதாகச் செய்தல், சமூக உருவாக்க முறையிலேயே நீதியின் அடிப்படையை

6. T.M.Dak, Social Justice and Equality in India, p. 43 [Through caste system, Hinduism has sanctioned extreme form of inequality. Inequality being traditi -onal in its origin, tended to acquire religious sanction and therefore efforts to promote equality are often construed as attemps to break with tradition]

7. இரகுநாதன், அக்டோபர் புரட்சியும், தமிழ் இலக்கியமும், பக். 10

அமைத்தல், இப்படிச் செய்யப்படாத நிலையில் மனிதர்கள் மிருகங்களாக நடந்துகொள்வர். இதற்கேற்ப நீதியை அமைத்து ஏறுமுகமான பரிமாண வளர்ச்சி பெறல்—ஆகிய கூறுகளின் ஒன்றிணைந்த சமூகவிதியே சமூக நீதி என்பதை பாரதியின் கருத்து உணர்த்துகிறது எனலாம். பாரதியின் கூற்றும் பங்கீட்டு] நீதி சார்ந்ததே. இந்த ஒளியில் நோக்கினால் இந்திய சமூக வரலாற்றுப் போக்குகள்பற்றிய அடிப்படைகள் தெளிவாகும்.

மேற்கண்ட சிறு விளக்கத்திலிருந்து இந்திய சமூகத்தின் அமைப்பானது காலங்காலமாகப் பங்கீட்டு அநீதி சார்ந்தே உருவாக்கப் பெற்றுவந்துள்ளது என்பதை அறியலாம். இந்த அமைப்பினை நிலைநிறுத்தும் வேர்களாக, சாதி. மதம், கூட்டுக் குடும்பம், கிராமச் சமுதாய அமைப்பு ஆகியன செயல்பட்டுள்ளன. இவற்றில் சமூக மதிப்புகளாக ஆழ்ந்து செயலாற்றி வருவன மதம் சார்ந்த பல்வேறு கருத்துக் கூறுகளாகும்.

மதம் என்பது கடவுள் நம்பிக்கையை அடிப்படையாகக் கொண்டிருந்தாலும் கோவில் என்ற நிறுவன அமைப்பின் வழி, சாதீயத் தரநிலை வேறுபாடுகளைக் காப்பாற்றுகின்ற செயலையே செய்துவந்துள்ளது. ஆயினும், கடவுளின் முன் அனைவரும் சமம் என்ற அருளாளர் சிலர் சமூகத்தின் சாதீயத்தரநிலை வேறுபாடு களுக்கு எதிர்க்குரல் கொடுத்துள்ளனர். ஒருபுறம் கடவுளின் முன் எல்லோரும் சமம் என்றும் மறுபுறம் கோயில் நிறுவனத்தின் முன் சாதீய நடைமுறைகள் தக்க வைக்கப் பெற்றும் வந்திருக்கும் இரட்டை நிலையைப் பழைய வேளாண் சமூகங்களில் காண்கிறோம். கோயிலை மையமாக வைத்து ஏராளமான விளைநிலங்கள் இணைக்கப்பெற்று, பொருளாதார உற்பத்தி முறைமையின் நிர்வாக மையமாகவும் கோயில் செயல்பட்டு வந்தமையே இதற்குக்காரணம் எனலாம். சமூக அளவில் பரந்து பட்டுச் சாதீயமும் கோயில் முறைகளும் செல்வாக்குச் செலுத்தி வந்தன; குடும்ப அளவில் ஆண் உரிமை முதன்மை கொண்ட கூட்டுக் குடும்பம் செல்வாக்குச் செலுத்தின. கூட்டுக் குடும்பம் (joint family) என்பது அடிப்படையில் ஓர் உற்பத்தி அங்கம்தான். பல ஒற்றைக் குடும்பங்கள் உள்ளிணைந்த நுகர்ச்சி அங்கமாக,

உற்பத்தி அங்கமாகத் திகழ்வது.[8] வேளாண்மைப் பணிகளுக்கு இது வசதியாக இருந்தது. இந்த அமைப்பில் ஆடவரே முதன்மை பெற்றிருந்தனர். பெண்களின் நிலை உரிமையற்ற நிலையாகவே இருந்தது. பாலியல் முறையில் பெண்கள், ஆண்களின் நுகர்ச்சிப் பொருளாகவும், சொத்துக்களின் வாரிசைப் பெற்றுத்தரும் கற்புடை குலமகள்களாகவும் கருதப்பெற்றனர்.

எனவே, பழையகால வேளாண் சமூக அமைப்பில் பெண்களுக்கும் சமமான நீதி வழங்கப் பெறவில்லை எனலாம். ஒட்டுமொத்தமாகப் பார்த்தால் சாதீய ஒடுக்குமுறை, சாதீய மதிப்புகள், கோவில் பண்பாடு சார்ந்த மதிப்புகள், பெண்ணுரிமையின்மை, மதவெறி. பொருளாதாரச் சுரண்டல் - ஆகியனவே சமூக அநீதியின் சமூக வடிவங்களாக இருந்தன எனலாம். இத்தகை சமூகப்பின்புலத்தில் படைப்பாளியாக இருக்கும் கவிஞர்கள் இவற்றிற்கு எதிராகக் குரல் கொடுப்பதே சமூகநீதிக்கான வெளிப்பாடு எனலாம். ஆனால் இத்தகைய குரல்கள் பல்வேறு வகையில், கவிஞர்களின் ஆளுமை - சூழலுக்கேற்ப வெளிப்பாடாகி உள்ளன. இலக்கியப்படைப்பு என்ற நிலையில், பல்வகை வெளிப்பாடுகளே சிறப்பானவை.

இருபதாம் நூற்றாண்டின் தொடக்கத்தில் புதிய முதலாளித்துவப் பொருளாதார வளர்ச்சிக்குப் பழைய சாதீய அமைப்பு பெரும் தடையாக இருந்தது. தன்னிச்சையான தொழில் வளர்ச்சி" போட்டி முயற்சிகளுக்கும், சமூக, தொழில் முறையிலான இடம் பெயர்தலுக்கும் பழைய கட்டுத் திட்டமான சாதி அமைப்பு பெருந்தடையாக இருந்தது. எனவே, இதன் இயல்பான புதிய செயல்பாடாக, சாதீய அமைப்புக்கும் அது சார்ந்த பல்வேறு சமூக - மத மதிப்புகளுக்கும் எதிரான குரல்கள் அதிகமாக மேலெழத் தொடங்கின. (பொருளாதார அமைப்பு மாற்றம் சாதி இறுகலைத் தளர்த்திவிட்டது என்பது வரலாற்றுண்மைதான்.)

---

8. David G. Markelbauni, Rural Sociology in India, P. 693 [The Joint family has long been the Common form of family organizations in India, sanctified in scripture and sanctioned in secular law......... The several nuclear families thus grouped form a single unit of Consumers and often also a single Producing Unit]

ஆனால், இருபதாம் நூற்றாண்டை ஒட்டித்தான் சமூக நீதி சார்ந்த கவிதைக் குரல்கள் எழுந்தன என்பது உண்மையல்ல. இருபதாம் நூற்றாண்டில் வலிமையுடன் சமூக அரசியல் சார்பில் வெளிப்பட்டாலும், என்று அநீதி தோன்றியதோ அன்றிலிருந்தே நீதி சார்ந்த கவிதைக் குரலும் வெளிப்படத் தொடங்கிற்று எனலாம். இருபதாம் நூற்றாண்டுக்கு முன்பே இந்தக் குரல் எவ்வாறு ஒலித்தது என்பதை ஒரு சில சான்றுகள் மூலம் பார்த்துவிட்டுப் பின்னர், இருபதாம் நூற்றாண்டுக் கவிதைகளுக்குச் செல்லலாம்.

## இருபதிற்கு முன் நீதியும் கவிதையும்

இருபதாம் நூற்றாண்டுக்கு முன்புள்ள காலங்களில் சமூக நீதிக் கருத்தானது எவ்வாறு தமிழில் வெளிப்பட்டுள்ளது என்பது பற்றிப் பார்ப்பது, மிக விரிந்த ஆராய்ச்சி எல்லையைக் கொண்ட பரந்த, அகன்ற, ஆழ்ந்த பணியாகும். பல்வேறு வரலாற்றுக் கால மாற்றங்களை உட்கொண்டு கவிதைப் போக்குகளை வெளிப்படுத்தும் மிகப்பெரிய ஆராய்ச்சியாகும். ஆயினும் சில பொதுவான போக்குகளை அடையாளம் கண்டு அதன் தொடர்ச்சியாக இருபதாம் நூற்றாண்டுக்குள் செல்வதே பொருத்தமான முறையாகும். இந்தியாவின் பழைய சமூகச் சிக்கல்களே இன்னும் தீர்ந்தபாடில்லை; அதற்குள் புதிய புதிய சிக்கல்கள் கூடிக் கலந்துவிட்டன என்கிறார் ஒரு சமூகவியலறிஞர்[9]. எனவே, இருபதிற்கு முன்னுள்ள சமூக நீதிக் கவிதைப்போக்கை அறிந்து அதன் தொடர்ச்சியாகப் பின்னுள்ள கவிதைப் போக்கை ஆராய்வது தேவையானதாகும். இந்த வகையில்தான், பழைய சமூகநீதிக் கவிதைகள் பற்றிய குறைந்த அளவு செய்திகள் விளக்கப் பெறுகின்றன. இந்தச் சிறு விளக்க அறிமுகத்திற்குச் செல்லுமுன், சமூகநீதிக் கவிதையின் வெளிப்பாட்டியல்பு பற்றி அறிந்து கொள்ளல் வேண்டும்.

சமூகநீதிக் கவிதையின் வெளிப்பாட்டியல்பில் மூன்று கூறுகள் இடம்பெறும். அவை :

---

9. Arnold M. Rose, Social problems in Changing World, P. 331 [India is not solving its old problems, but is beginning to face new ones brought on by rapid social Change]

1. மறுப்பு (dissent)
2. எதிர்ப்பு (Protest)
3. சீர்திருத்தம் (Reform)

மறுப்பு என்பது எதிர்ப்புக்குரிய ஒரு முன் தேவையாகும். அடிப்படை உரிமைகள் பற்றிய விழிப்புணர்வை ஏற்படுத்துவது· எதிர்ப்பில் பங்கெடுக்கவும் சீர்திருத்த இயக்கத்தில் இணையவும் இதுவே முன்னிறுத்துவது. மிக அதிகமான கட்டுத்திட்டங்கள், விதிக்கெடுபிடிகள் கொண்ட மூடிய சமுதாயத்தில் (closed society) மறுப்புக்குரல் முக்கியத்துவம் வாய்ந்ததாகும். இதுவே, எதிர்ப்பியக்கத்திற்கும் சீர்திருத்தத்திற்கும் இட்டுச்செல்லக்கூடியதாக அமையும். எதிர்ப்பு என்ற விழிப்புணர்வானது, அநீதியான மனிதத்தன்மையற்ற சூழலை மனிதன் எதிர்நோக்கும் போது எழுகிறது. அடிப்படை உரிமைகள் பற்றிய ஓர்மை, போராடும் முனைப்பு, தனித்துவ உணர்வு, உரிமை வாழ்வுணர்வு—ஆகிய நான்குமே எதிர்ப்பின் அடிப்படைக் கூறுகள் எனலாம். மறுப்பின் தொடர்ச்சியாக, சீர்திருத்தத்தின் முன்னதாக இடம் பெறுவது எதிர்ப்பு. நிறுவன முறைமைக்கு எதிராகவே இந்த எதிர்ப்பு அமையும்.[10]

ஆகவே, சமுதாயத்தில், இயற்கையான உரிமைகளுக்காகவும் நீதிக்காகவும் வெளிப்படும் குரல்களில் மறுப்புணர்வும், எதிர்ப்புணர்வும், சீர்திருத்தப்பாங்கும் இருக்கும் எனலாம். அநீதிக்கெதிராகக் கிளர்ந்தெழுவது என்பது மனிதனிடம் இயற்கையாக உள்ள பிறவிக்குணம் எனலாம். ஆனால், இந்த எதிர்ப்பு - மறுப்பு என்பனவற்றின் தன்மை, இன்று நாம் காண்பதுபோல பழங்காலங்களில் இருக்கவேண்டும் என்பதில்லை; இப்படி இருக்கவேண்டும் என எதிர்பார்க்கவும் கூடாது. பத்தொன்பதாம் நூற்றாண்டுக்கு முன்வரை இந்தியாவில் மட்டுமன்று, உலகெங்கிலும்கூட, சமூக

10. Narendra Mohan, Indian Movements - Dissent and Protest in Modern Hindi Literature, P. 258 [Protest is thus primarily the result of intense human Consciousness which inevitably involves values. It is both a manifestation of human concern and an endeavour to add meaning to human existence by strengthening, the concept of social justice, equality, and liberty. Protest has the quality of identifying itself with the downtrodden and the oppressed]

அமைப்புக்கு எதிரான எதிர்ச் செயல்கள் சமயம் என்ற சட்டகத்திற்குள் தான் வெளிப்பட்டுள்ளன என்பர் சமூகவியல் ஆராய்ச்சியாளர்கள்.[11] ஆனால் இக்காலத்தில் சமயம் மையம் கொள்ளவில்லை. அநீதிக்கெதிரான கொள்கைப்போக்கானது, அறிவியல் ஓர்மை, சமூகப் பார்வை, வர்க்கப்போராட்டம், அரசியல் பார்வை ஆகியவற்றை உள்ளடக்கியதாக அமைந்துள்ளன.[12] எனவே' சமூக நீதிக்கான குரல்கள் வரலாற்றுக் காலங்களின் நிலைமைகளுக்கேற்பப் பல்வேறு முறைகளில் வெளிப்பட்டுள்ளன எனலாம்.

**சங்ககாலம்**

தமிழ்நாட்டு வரலாற்றில் மறக்காலம் (Heroic Age) என்று அழைக்கப்பெறும் சங்ககாலம் (அல்லது சான்றோர்காலம்) சமயத்தைச் சமூக வாழ்வின் மையமாகக் கொள்ளாத காலம்; அதன்பிறகு இந்தியாவெங்கும் பரவிய சமண பௌத்த நெறிகளை மையமாகக்கொண்ட சமூகப் போக்கினைப் பார்க்கிறோம். இப்போக்கு, வைதிகச் சடங்கு முறைகளுக்கும் சாதீய வேறுபாடுகளுக்கும் எதிரானதாகத் தோன்றிப் பரவியிருந்தது. இப்போக்கும் பின்னர் சிறப்பிழந்து, பிராமணீயத்தை மையமாகக் கொண்ட இந்து சமயப்பாங்கு சமூகத்தில் வலுவாக வேரூன்றிவிடுகிறது. ஆங்கிலேயர் வரும் வரை இந்தச் சமூகப்பாங்கு, அடிப்படை மாறாமலேயே இறுகி, வலுவாக நிலை பெற்றதாகிவிடுகிறது. இந்தப்போக்கில், கவிதைகள் வெளிப்படுத்தும் சமூகநீதியியல்பைச் சில சான்றுகள் மூலம் காணலாம்.

சங்ககாலம் எனப்படும் மிக நீண்ட ஒரு காலப்பகுதியைச் சேர்ந்த பழந்தமிழ்க் கவிதைகள் மூலம், அக்காலப்பகுதியில் நான்கு முக்கியமான சமூகநிலைகளை அறியமுடிகிறது. அவை :

11. Sarita Kamra, Social Justice and Equality in India - The problem of social Inequality and Mechanisms of its Perpetuation, P. 48. [However, prior to 19th Century in India, like many western Countries, reactions against the existing social order occurred generally within the frame work of religion]
12. Narendra Mohan, P. 262 [Dissent and Protest in the Modern Context are different from the medieval one, basically because religious and philosophical beliefs are not at its centre. Instead, the modern concept includes scientific consciousness, social philosophy, class struggle and political vision]

(1) தொல்கால இனக்குழுவின் வளர்ச்சியுற்ற நிலை.

(2) இந்நிலை மாறுதலுக்குள்ளாகும் போக்கு.

(3) வளமான ஆற்றோர உணவு உற்பத்தி சார்ந்த தனியுடைமை முறை.

(4) நன்கு வளர்ச்சி பெற்ற வணிகச் சமூக நிலை.

இந்நான்கு நிலைகள் பற்றியும் அறிந்து கொள்ள ஏராளமான குறிப்புகள் உள்ளன. கா. சிவத்தம்பி, க. சுப்பிரமணியன், ஆ. சிவசுப்பிரமணியன் ஆகியோர் இதுபற்றி விரிவாக எழுதியுள்ளனர். சிலம்புச் செல்வர் ம. பொ. சிவஞானம் 'இலக்கியத்தில் சோஷலிசம்' என்ற நூலில் ஏராளமான குறிப்புகளைத் தந்துள்ளார். இங்கே இப்போது வேண்டிய குறிப்பு என்னவென்றால், இத்தகைய சூழலில் சமூகநீதிக் குரல் எவ்வாறு வெளிப்பட்டுள்ளது என்பது பற்றியதே. இனக்குழு வாழ்வில், தலைவனுக்கு என்று தனியுடைமை கிடையாது. கூட்டு வாழ்வு முறையே இருந்தது.

> "உண்டாயிற் பதங் கொடுத்து
> இல்லாயி னுடனுண்ணும்
> இல்லோர் ஒக்கற் றலைவன்" (புறம்.95)

தொல் தமிழ்த் தலைவன்.

ஆனால் தனியுடமை ஏற்பட்டபின் இந்த நிலைமாறுகிறது. ஒரு சிலரிடம் செல்வம் குவிகிறது. பங்கீட்டு நீதி கிடைக்காமல் போய்விடுகிறது. எனவே, வறுமை சமூகத்தில் இடம் பெறுவது தவிர்க்க வியலாததாகி விடுகிறது. அந்நாளையக் கவிஞர்கள் வறுமை நிலையைக் கவிதைகளில் ஆழமாக வெளிப்படுத்தியுள்ளனர். நிலத்தில் உழவு செய்து எடுத்த குறைந்த அளவு தானியமும் கடனளித்தவர்களால் வளைத் தெடுத்துக் கொண்டு போய் விடும் காட்சியையும் சங்ககாலத்தில் காண்கின்றோம். (புறம். 327, 356) பெருஞ்சித்திரனார், பெருந்தலைச் சாத்தனார் போன்ற புலவர்களின் பாடல் மூலமும் வறுமை நிலையைக் காண்கிறோம். சமூகத்தின் வறுமை நிலைகளை நுட்பமாகச் சித்திரித்து அவற்றின் கொடுமையை உணர்த்துகின்ற முறையில், சமூகத்தில் நிலவும் அநீதியைப் புலவர்கள் வெளிப்படுத்தும் முறையினை காண்கிறோம். பெரும்பாலும் சமூகக்காட்சிகளை ஆக்கிக் காட்டுவதன் மூலம் அநீதி அமைதியாக வெளிப்படுத்தப்

பட்டுள்ளது எனலாம். ஆனால், சற்றுக் கடுமையாக எதிர்ப் புணர்வை வெளிப்படுத்தும் நிலையையும் காண முடிகிறது. உறையூர் ஏணிச்சேரி முடமோசியார் குறிப்பிடத்தக்க சமூக நீதிக் கவிஞர் எனலாம். பொருளாதார ஆதிக்கம் கொண்ட செல்வர் களை வன்மையான சொற்களால் சாடுகிறார். இத்துடன், தத்துவார்த்த முறையில் செல்வர்களின்—குறிப்பாக வணிகர்களின் —சமய மதிப்புகளையும் மறுக்கிறார்.

செல்வர்களின் அரண்மனைகளின் தன்னலத்தை, பழைய கூட்டு வாழ்வின் பகுத்துண்ணும் வாழ்வியலுடன் ஒப்பிட்டு, கூர்மையான சொல் மூலம் செல்வர்களின் போக்கை எதிர்த்துக் குரல் கொடுக்கிறார்.

"பிறர்க்கு ஈவுஇன்றித் தம் வயிறு அருத்தி
உரைசால் ஓங்கு புகழ் ஓரீ இய
முரைசுகெழு செல்வர் நகர் போலாதே" (புறம் 127, 810)

என்று கூறுகிறார். இப்பாடல் மூலம் கோயில் என்ற சொல் தொல்காலக் கூட்டுச் சமூக வாழ்வில் தலைவனின் இல்லச் சூழலைக் குறிப்பதாகவும், நகர் என்பது புதிய செல்வர்களின் பெருமாளிகைச் சூழலைக் குறிப்பதாகவும் இருப்பதை அறிந்து கொள்ளலாம். முடமோசியாரின் அறிவார்ந்த இன்னொரு எதிர்ப்புக்குரல் மிகவும் முக்கியமானதாகும்.

"இம்மைச் செய்தது மறுமைக் காமெனும்
அறவிலை வணிகன் ஆய் அலன் பிறரும்
சான்றோர் சென்ற நெறியென
ஆங்குப்பட்டன்று அவன்கை வண்மையே (புறம். 134)

இப்பாடலில் சமூக மதிப்பு விமர்சனத்துக்குள்ளாக்கப்படுவதை அறியலாம். சான்றோர் காலத்தில் கொடை என்பது இயல் பானது. எதிர்பார்ப்புகள் கொண்டதுமல்ல; மறுபிறவிச் சிறப்பு நோக்கம் கொண்டதுமல்ல. ஆனால் கொடை, (தானம்) என்பதை மறுபிறவியுடன் தொடர்படுத்திக் கூறும் சமண சமயக் கருத்தே இப்பாடலில் கண்டனத்துக்குள்ளாகிறது. இக்கண்டனமானது, வணிகர்களின் தொழிலோடு இணைத்துக் காட்டப் பெறுவது குறிப்பிடத்தக்கதாகும். "கொடை என்பது ஒரு வணிகமல்ல" என்று கூறும் குறிப்பு வணிகர்களைத் தத்து வார்த்த முறையில் எதிர்க்கும் குரல் எனலாம். (பாரதிதாசனின் அகத்தியன் விட்ட புதுக்கரடி என்ற கவிதை இங்கே ஒப்பு நோக்கத்தக்கது) எதிர்ப்புக் குரலில் மதிப்புகள் (values) உள்ளீடு

பெறுவது தவிர்க்கவியலாத ஒரு நிலையாகும் "ஆழ்ந்த, மனிதத்துவ ஓர்மையுடன் எதிர்ப்பு நிகழ்வதால், இந்த எதிர்ப்பில் மதிப்புகள் இடம்பெறுவது தவிர்க்கவியலாததாகிவிடுகிறது. இதன் மூலமே, சமூக நீதி, சமத்துவம், விடுதலை ஆகிய கொள்கைகளை வலுப்படுத்தி வாழ்வுக்குப் பொருள் ஊட்டுவதாகச் செய்ய முடிகிறது"[13] என்று ஒரு திறனாய்வாளர் கூறுவதற்கேற்ப, உறையூர் ஏணிச்சேரிமுடமோசியாரை, அநீதிக்கெதிராக எதிர்ப்புக் குரல் கொடுத்த கவிஞராகக் காண்கிறோம். சங்ககாலக் கவிதைகள் மூலம் சமூகநீதிக்குரலானது, (1) அமைதியான காட்சி ஆக்கச்சித்தரிப்பாகவும் (2) கூர்மையான சொல் எதிர்ப்பாகவும் வெளிப்பாடு பெற்றுள்ளது எனலாம். பொருளாதார ஆதிக்கம், இதனைச் சார்ந்த மதிப்புகள் (values) பற்றிய கண்டனத்தை இவ்வெளிப்பாடுகளின் உள்ளடக்கமாகக் காண முடிகிறது.

**இடைக்காலங்கள்**

சங்ககாலத்திற்கும் பல்லவர் காலத்திற்கும் இடைப்பட்ட காலத்தில் சமண, பௌத்த, வைதிக சமயப் போராட்டங்கள் நிலவின. வேதவேள்விச் சடங்கின் மூலம் உயிர்க்கொலை புரிதலுக்கும் பிறப்பால் ஏற்றத்தாழ்வு கற்பித்தலுக்கும் எதிராகப் பௌத்தம் குரல் கொடுத்தது. பௌத்த சமணக் கருத்தோட்டங்கள் பரவியிருந்த பின்னணியில், மதச்சார்பற்றுப் பொதுநீதியை வலியுறுத்திய திருவள்ளுவரும், பிறப்பால் மேல் கீழ்கற்பித்தலை எதிர்க்கிறார். பிறப்பால் மக்களைக் கீழ் மேல் என்று பிரித்தல் மூலம் மேல் நிலையில் இருப்பவர்கள் பொருளாதார வளங்களைப் பெருமளவில் கவர்ந்து கொள்ளும் நிலை உருவாகி விடுகிறது. இவ்வாறு பிறப்பு வேற்றுமை சமூக அமைப்புக் கூறாக மாறியபின் மேல்சாதியினரின் ஆதிக்கம் மேலோங்கி விடுகிறது. நாளடைவில் பிறப்பு வேற்றுமையானது கடவுளால் உருவாக்கப்பட்டது என்ற கருத்தியலும் நிலை பெற்றுவிடுகிறது. வறுமை - பசி - பிறப்பு வேற்றுமை ஆகியன ஒன்றை ஒன்று சார்ந்தனவாகச் சமூகத்தில் நிலை பெற்றுவிடுகின்றன. எனவே, பிறப்பு வேற்றுமைக்கும் வறுமைக்கும் மாற்றாக மனிதர் எல்லோருடைய சமமதிப்புக்கும், சம உரிமைக்கும் உரிய சமூகநீதி சார்ந்த குரல்கள் இக்காலத்தில் வெளிப்படலாயின. திருவள்ளுவர், சாத்தனார், இளங்கோ

13. பார்க்க அடிக்குறிப்பு எண் 10.

அடிகள் ஆகியோர் தங்களுக்கே உரிய தனித்தன்மையுடன் சமூக நீதிக்கான குரல் எழுப்பியுள்ளனர்.

மனிதர்களுக்குப் பெருமை எது என்ற கேள்விக்கு விடை யளிப்பதுபோல, பெருமை பிறப்பால் வருவதன்று என்கிறார் திருவள்ளுவர் :

"பிறப்பொக்கும் எல்லா உயிர்க்கும்..." (குறள். 215)
"மேலிருந்தும் மேலல்லார் மேலல்லார் கீழிருந்தும்
கீழல்லார் கீழல் லவர்" (குறள். 216)

மேல் - கீழ் என்ற சமூகத் தரநிலை இருந்த சூழலிலேயே வள்ளுவரின் இந்த நீதிக் குரல் கேட்கிறது என்பதில் ஐயமில்லை. வள்ளுவர் வாழ்ந்த காலம் பொற்காலமல்ல; சாதீய - வேறுபாடு இருந்த காலமே. 'மணிமேகலை'யில் சாத்தனார் இச்சாதி வேறுபாட்டுணர்வைச் சற்றுக் கடுமையாக, ஆபுத்திரன் வாய்வழிச் சாடுகிறார். "அருமறை நன்னூல் அறியாதிகழ்ந்தனை; தெரு மரல் உள்ளத்துச் சீறியை நீயவ், ஆமகனாதற் கொத்தனை அறியாய், நீமகன் அல்லாய் கேளென" (ஆபுத்திரன் திறன் அறிவித்த காதை 59-62). அந்தணர்கள் ஆபுத்திரனைக் கேலி செய்தபோது ஆபுத்திரன் இவ்வாறு கூறுகிறான் :

"ஆன்மகன் அசலன் மான்மகன் சிருங்கி
புலிமகன் விரிஞ்சி புரையோர் போற்றும்
நரிமகன் அல்லனோ கேசகம்பளன்
ஈங்கிவர் நுங்குலத் திருடி கணங்களென்
றோங்குயர் பெருஞ்சிறப் புரைத்தலு முண்டால்
ஆவொடு வந்த அழிகுலம் உண்டோ"
(ஆபுத்திரன் திறன் : 63-68)

பிறப்பு அடிப்படையிலான சிறப்பின்மையை வலியுறுத்தும் சாதீயத்திற்கு எதிராகச் சாத்தனார் குரல் கொடுக்கிறார். சாத்தனாரின் 'மணிமேகலை'யில் நேரடியான அறிவுரைகள் மிகுந்துள்ளன.

இளங்கோவோ, தமது 'சிலப்பதிகாரத்தில் பிறப்பு அடிப்படை யிலான சிறப்பின்மைக்கு எதிரான சமூக நீதியை, மிக நுட்பமாக, நேரடியறிவுரையின்றி, ஆழ்ந்த உள்ளுறுத்தல் மூலம் காட்டுகிறார். மாதவி கணிகையர் குலத்தினள்; 1008 களஞ்சு பொன்

கொடுப்பவனிடம் காதற்பரத்தையாக இருக்கும் மரபினள். ஆனால் அவளைக் குலமகளாகக் காட்ட முயலும் இளங்கோ, கோவலன் வாய்மொழிவழி, முதலில் ''ஆடல்மகளே ஆதலின் ஆயிழைபாடு பெற்றமை (சிலம்பு 8 : 109-110) என்றுகூற வைக்கிறார். ஆடல் கணிகையரின் சமூகத்தரநிலை நடத்தையை மீறிய அவளின் மனிதத்துவப் பண்பினை வெளிப்படுத்த எண்ணும் இளங்கோ, கோவலனுக்கு அவள் எழுதிய இரண்டாம் கடிதத்தின் மூலம் அதனைக் குறிப்பாக உணர்த்துகிறார்.

''அடிகள் முன்னர் யானடி வீழ்ந்தேன்
வடியாக்கிளவி மனக் கொளல் வேண்டும்
குரவர்பணி அன்றியும் குலப்பிறப்பாட்டியொடு
இரவிடைக்கழிதற் கென்பிழைப்பறியாது
கையறு நெஞ்சங்கடியல் வேண்டும்.
பொய்தீர் காட்சிப் புரையோய் போற்றி''

(சிலம்பு 13 : 87-92)

ஒரு கணிகையர்குலப் பெண்ணைக் காப்பியப் பாத்திரமாக்கி, அவள்மீது பரிவு ஏற்படுத்தும் முகத்தான், அவள் சார்ந்த குலம் பற்றிய இழிநிலையை மனிதத்துவக் கண்ணோட்டத்துடன் நுட்பமாகச் சித்திரிக்கும் இளங்கோ, சாதியச் சமூக அநீதிக் கெதிரான அமைதிக் குரலை, மறைமுகமாக வெளிப்படுத்துகிறார் எனலாம்.

பொருளாதாரப் பங்கீட்டு நீதிபற்றியும் வள்ளுவர் குரல் கொடுக்கிறார். அறிவுறுத்தும் பாங்கில், உயர்இலட்சியக் கற்பனைத் தோரணையில் குரல் கொடுக்கிறார்.

''ஊருணி நீர்நிறைந் தற்றே உலகவாம்
பேரறி வாளன் திரு'' (குறள் 972)

''பயன்மரம் உள்ளூர்ப் பழுத்தற்றால் செல்வம்
நயனுடை யான்கண் படின்'' (குறள் 973)

என்ற குறள்கள் மூலம் செல்வம் எல்லோருக்கும் பயன்பட வேண்டும் என்கிறார். உழைப்பில் நேரடியாக ஈடுபடும் உழவர் களைப் பெருமைப்படுத்துகிறார் வள்ளுவர். உழவர் இல்லை எனில் உலகில் எந்த ஒழுங்கும் இல்லை என்று கூறும் வள்ளுவர் வறுமை யின் கொடுமை பற்றியும் குரல் கொடுக்கிறார். வறுமையின்

கொடுமையை மிகவும் ஆழமாக வருணிக்கும் வள்ளுவர், "பிச்சை எடுத்துத்தான் உலகில் வாழ வேண்டும் என்றால், இந்த உலகைப் படைத்த இறைவனும் ஒழிக" (குறள்-1062) என்று ஆவேசத்துடன் கூறுகிறார். மனிதாபிமான உணர்வு நிலையில் நின்று சமூக வாழ்வில் பங்கீட்டு நீதியை வலியுறுத்தும் போக்கைத் திருக்குறளில் காண்கிறோம். மணிமேகலையில், சாத்தனார், பசிப்பிணியை நீக்குவதே பெரிய அறம் எனக் கூறி விடுகிறார்.

"மக்கள் தேவர் எனஇரு சார்க்கும்
ஒத்த முடிவின் ஓரறம் உரைக்கேன்
பசிப்பிணி தீர்த்தல் என்றே அவரும்
தவப்பெரு நல்லறம் சாற்றினர் ஆதலின்
மடுத்ததீக் கொளிய மன்னுயிர்ப் பசிகெட
எடுத்தனள் பாத்திரம் இளங்கொடி தானென்"
(அறவாணர் தொழுத : 116-21)

சாத்தனாரின் அணுகுமுறையில் சீர்திருத்த நோக்கம் இருப்பதை அறிய முடிகிறது. சாதியக் கெடுபிடிகளுக்கெதிராகக் கடுமையான கூர்மையான சொற்களைச் சாத்தனாரும் வள்ளுவரும் பயன் படுத்துகின்றனர். வறுமை நீங்கிட, தானம் செய்தல் என்ற நல்லறத்தைச் சீர்திருத்த முறையில் சாத்தனார் அறிவுறுத்துகிறார். வள்ளுவரோ உருவக முறையிலான படிமவியல் மூலம் பங்கீட்டு நீதியை இலட்சியப்படுத்திக் காட்டுகிறார். சமூகநீதி பற்றிய ஓர்மை நிலையிலேயே அவர்கள் எழுதியுள்ளனர் என்பதில் ஐயமில்லை.

பல்லவர் காலத்திற்குப் பின்னர், சமூக அமைப்பானது சாதீய—தனியுடைமைச் சார்புடன் மிகவும் இறுக்கமான, ஆழ்ந்து வேர்பிடித்துக் கொண்ட ஒன்றாக மாறிவிடுகிறது. இது பற்றி வரலாற்றுத்துறையறிஞர் எம். ஜி.எஸ். நாராயணன், "நிலப்பிரபுத் துவ முடியரசு வடநாட்டில் குப்தர்கள் காலத்தில் தோன்றியது. சாமந்தா என்ற பிரபுத்துவ அமைப்புடனும், பிராமணக்குடி ஏற்றங்களுடனும், வணிகக் குழுக்களுடனும், சைவ, வைணவக் கோயில்களுடனும், சாதியத் தரநிலை வேறுபாடுகள் கொண்ட அமைப்புடனும், பக்தி இலக்கியப் பெருக்கத்துடனும் (இப்பக்தி இலக்கியம், மனிதராக்கப்பட்ட கடவுளரை மையமாகக்கொண்டது) வடக்கே தோன்றியது. வடக்கே மட்டுமல்ல, டெக்காண் பகுதியில்

சாளுக்கியர்காலத்திலும், தென்னாட்டில் பல்லவ—பாண்டிய—சேர—சோழர் காலத்திலும் தோன்றியது''[14] எனக் கூறுகிறார்.

பக்தி இயக்கமாகத் தோன்றிய செயல்பாடுகளுக்கும் சமூக—அரசியல்—பொருளாதாரப் போக்குகளுக்குமிடையில் உள்ளுறவுத் தொடர்பில் இந்தியா முழுதுக்குமான பொதுக்கூறுகள் சிலவற்றை நாராயணன் குறிப்பிட்டுக் காட்டுகிறார். அவை தமிழகத்தில் பல்லவ ஆட்சிக் காலத்தை ஒட்டித் திட்டம்பெற்றன. அவர் காட்டும் முக்கியக் கூறுகள்.

1. சங்க காலத்திற்குப்பின், பல்லவ சேர பாண்டியர்களின் தலைமையில் பிராமணர் ஆதரவுப் பிரபுத்துவ முடியரசு வளர்ச்சி.

2. கோயில் கட்டுதலில் ஏற்பட்ட வளர்ச்சியோடு, கோயிலை ஒட்டிக் குடியிருப்புப்பெற்றுவாழ்ந்த பிராமணர்களின்நிர்வாகத்தில், பிராமாணரல்லாதார் வேலை செய்யக் கூடிய விளை நிலங்கள் கோயில் சொத்துக்களாக உருவானமை.

3. வணிகர், தொழில்நுட்பக் கலைஞர்கள் ஓர் அமைப்பாக வளர்ச்சி பெற்றமை.

4. பிராமண - பௌத்த - சமண விவாதங்களும் அவற்றின் முடிவில், பிராமண மேலாதிக்கம் கொண்ட இந்து சமயம் நிலை பெறுதலும், வைதீகம் சாராத சமயங்கள் பின்னுக்குத் தள்ளப் படுதலும் அமைதல்.

5, எல்லோரையும் தழுவிய ஒரு சாதிஅமைப்பு நிறுவப் படுதல். இதில் பழங்காலத்திலிருந்தே வரும் இனக்குழுக்களும் இடம் பெற்று - யாவும், தரநிலை வேறுபாடு பெறல். சடங்கு

14 Indian Movements, p. 39 [It is interesting to note that the emergence of a feudalized monarchy with graded systems of samantas or feudatories, charted brahman settlements and trade corporations, temples of Shiva and Vishnu, the hierarchical order, of caste and spate of devotional literature, centred on personified Gods, was characterized not only during the Gupta period of the north, but also during the Chalukya period in the Deccan, and Pallava - Pandya - Chera - Chola period in the Far South."]

களையும் சமூக மதிப்புகளையும் தீர்மானிக்கும் அதிகார முதன்மையைப் பிராமணர் அடைதல்.[15]

சமணத்தின் வெறுப்பு சார்ந்த கடுமையான விரதங்களும் நோன்புகளும் தத்துவார்த்த அடிப்படைகளும் கொண்ட வாழ்வு, சைவர்களால் தோற்கடிக்கப் பெற்று, வாழ்க்கைப் பற்று கொண்ட அன்புணர்வின் வழியே சைவ நாயன்மார்கள் புதிய சமூக விழிப் புணர்வை உருவாக்கினர். கடவுளின் முன் எல்லோரும் ஒன்றே என்ற உணர்வினைச் சைவ நாயன்மார்களில் ஒருவரான அப்பர் வெளிப்படுத்துகிறார். சாதி வேறுபாட்டையும் மறுக்கிறார். சைவ, வைணவ இயக்கங்களில் சாதி வேறுபாடற்று எல்லா இனத்தவரும் பங்கெடுத்துள்ளனர். ஒரு சனநாயக ஆன்மீக இயக்கமாகத் தோன்றிய பக்தியியக்கம் நாளடைவில் நிறுவன வயப்படுத்தப்பெற்ற

---

15. மேலது, பக், 38

[1. The growth and consolidation of new brahman - backed feudal monarchies first under Pallavas, and then under the Pandyas and Cholas of post sangam period.

2. The flowering on the landscape of the early temple movement, especially the rock - cut and structural temples of Shaiva and Vaishnava deities. The temple Complex included vast landed property, that was administered by brahman trustees who lived in the settlements organized around the temples. where most of the tenets were non - brahmans.

3. The emergence of prosperous guilds of traders and artisans in several districts head quarters and in the semi - autonomous brahman settlements.

4. The eruption of acrimonious Brahman - Buddhist-Jain disputes which came to a close with the establishment of brahman supremacy and the triumph of Hindu religion; this relegated the non - vedic creeds into the background.

5. The establishment of an all - embracing caste system which attracted all the original clans and tribes of South India. These were then placed in a feudal hierarchical order in which the brahman was the point of reference for fixing ritual and social status]

பின், சாதீய - நிலவுடைமைக் கெடுபிடிகள் கொண்ட முடியரசு ஆதிக்கத்திற்குள் ஒடுங்கி விடுகிறது. கோயில், சடங்குகள், வழிபாட்டு மரபுகள் என மனிதமனத்தோடு இயையாத சடங்கு வடிவமாக மாறிவிடுகிறது. பக்தி இயக்கம் தோன்றிய தொடக்க காலச் சூழல்களில் சில குறிப்பிடத்தக்க மாறுதல்களைச் சமூக நீதி சார்ந்ததாக நாராயணன் காட்டுகிறார். அவை:

1. இந்துமதத்தின் மிக நுட்பமான - அருவமான அப்பாலைத் தத்துவத்திற்கு மாறான அன்புசார்ந்த பக்தியானது பழைய வேதச் சடங்குக் கெடுபடிக்கு மறுப்பாக விளங்கியமை.

2. சமூகத்தில்இருந்துவந்த சாதீய அமைப்புக்கு எதிரான நுண்ணிய எதிர்ப்புணர்வு வெளிப்பட்டமை.

3. வேதச்சடங்கு முறையை, ஆகமச்சடங்கு முறை ஓரளவு சக்தி குறைந்ததாகச் செய்தமை.

4. மேலும், கடவுள் முன்னிலையில் எல்லாச் சடங்குகளிலிருந்தும் விடுபட்டு அன்பு என்ற ஒன்றினை மையமாகக் கொண்ட போது, பக்தர்களின் முழுத் தன்விருப்பப் போக்குக்கு, இறைபக்தி மூலம் ஒரு நல்சூழல் ஏற்படுதல்.[16]

ஆனால் இவ்வாறு தோன்றிய சனநாயக ஆன்மீகப் பின்னணி நாளடைவில் மாறிவிடுகிறது. பழைய கெடுபிடியான மரபு இறுகலுக்குள் (orthodoxy) இறை உணர்வு இயக்கம் அமிழ்ந்து

---

16. மேலது, பக். 54-56
[1. The rejection of abstract metaphysics by the bhaktas denotes a spirit of strong dissent
2. Their general indifference to caste regulations carried a mild form of protest against the established Social order.
3. Vedic ritualism itself came to be replaced by agamaic ritualism by the beginning of the third century A.D. in North and by the beginning of the sixth century in South.
4. It exceeded all limits of rules and regulations ritualistic or social and proved its eccentricity by subjugating every aspect of life to this one principle.]

விடுகிறது. வாழ்க்கையில் எல்லா நிலைகளிலும் இந்தப் பின்னிறக்கம் நேர்ந்துவிடுகிறது. ஏராளமான நிலங்களும் சொத்துக்களும் கொண்டதாக வளர்ந்த கோயில்கள் பழமை வாதத்துடன் கூடிய அதிகாரத்தின் புரவலர்களாக மாறிவிடு கின்றன. மடங்கள் வருண பேதத்தினைக் காப்பாற்றும் மையங் களாக மாறிவிட்டன. மக்களிடையே செல்வாக்குப் பெற, மன்னர் களுக்குப் பக்தி இயக்கம் தேவையில்லை. பிராமாணியப் பிரபுத்துவ முறை வலுவானதாகி விட்டது. "பக்தி இயக்கத்தில் உருவான உயிர்த்துடிப்பானது—சமூக எழுச்சியாகி, சமூக அநீதிக் கெதிரான தாக எழுந்த உயிர்த்துடிப்பானது, வெறும் புராணப் புனைவு களுக்கு இடம் கொடுத்து உயிர்த்துடிப்பை இழந்து விடு கிறது."[17]

ஆக, பக்திஇயக்கம் மறைந்தபின், சமூகத்தில் சாதீய—பிரபுத் துவ அமைப்பு உறுதியாக்கப் பட்டுவிட்டது. சமயம், அதன் பாது காவலனாகி விடுகிறது. மேல்—கீழ் என்ற சமூகத் தர நிலை சமூகநியதியாகி விடுகிறது. ஆங்கிலேயர்கள் இந்தியாவிற்கு வரும் வரை இந்தச்சமூக அமைப்பானது நெகிழ்ச்சியற்ற நிலையிலேயே உள்ளது. இந்த விரிந்த காலப் பின்னணியில் நீதிக்காகக் குரல் கொடுத்தல் என்பது சாதீயத்திற்கும் - சமயத்திற்கும் எதிரான தாகவே உள்ளது. இவ்விரண்டில் சமய எதிர்ப்பு என்பது கடவுள் எதிர்ப்பன்று; கோயில் பண்பாட்டு எதிர்ப்பாகவே உள்ளது. கடவுள் மனதில் தான் இருக்கிறார்; கோயிலிலோ சடங்குகளிலோ இல்லை என்ற குரலே நீதிக்கான எதிர்ப்புக் குரலாக வெளிப்படு கிறது. இத்தகைய சமூக நீதிக்குரல் சித்தர்களிடமிருந்து வெளிப் பட்டுள்ளது. சித்தர்களில், சிவவாக்கியார் பாடல்கள், பல்வேறு நிலைகளில் எதிர்ப்புணர்வைக் காட்டுகின்றன.

வேத எதிர்ப்பு, கோயில் எதிர்ப்பு, வழிபாட்டுச் சடங்குகளுக்கு எதிர்ப்பு, புனித நீராடலுக்கு எதிர்ப்பு, மேல் - கீழ் என்ற சாதீயத் திற்கு எதிர்ப்பு, வைதீக முறையில் நீர் தெளித்தலுக்கு எதிர்ப்பு திருநீறணிதலை விமர்சித்தல், தேர்விழாக்களை விமர்சித்தல்

---

17. மேலது, பக். 58 [The living spirit of the bhakti movement which rebelled against many things, now gave place to the decorative charm of its myths and literature]

குருமார்களைவிமர்சித்தல் - ஆகிய பல நிலைகளில் சமூக அநீதியின் வடிவங்களைச் சிவவாக்கியார் காட்டுகிறார். ஆத்தீக நிலையிலிருந்தே இதனைச் செய்கிறார் சிவவாக்கியர். கோயில் பண்பாட்டு எதிர்ப்பு என்பதே அக்காலத்தில், சமூக ஆதிக்க சக்திகளுக்கு எதிரான குரலாக அமைகின்றது. ஒரு சில சான்றுகளை மட்டும் காணலாம்.

**கோயில் :** "கோயிலாவ தேதடா? குளங்களாவ தேதடா?
கோயிலும் குளங்களும் கும்பிடும் குலாமரே
கோயிலும் மனத்துளே குளங்களும் மனத்துளே!
ஆவதும் அழிவதும் இல்லை இல்லை இல்லையே!"
(சிவவாக்கியார் 30)

**பூசை :** பூசை பூசை என்று நீர் பூசைசெய்யும் பேதைகாள்
பூசையுள்ள தன்னிலே பூசைகொண்ட தெவ்விடம்
ஆதி பூசை கொண்டதோ அனாதி பூசை கொண்டதோ
ஏது பூசை கொண்டதோ இன்னதென்று இயம்புமே(32)

**வேதம் :** இருக்குநாலு வேதமும் எழுத்தையுற ஓதினும்

**திருநீறு :** பெருக்க நீறு பூசினும் பிதற்றினும் பிரான் இரான்
உருக்கி நெஞ்சை உள் கலந்திங் குண்மைகூற வல்லீரேல்
சுருக்கமற்ற சோதியைத் தொடர்ந்து கூடல் ஆகுமே(33)

**சாதீயம் :** பறைச்சி ஆவதேதடா பனத்தி ஆவ தேதடா
இறைச்சி தோல் எலும்பினும் இலக்கம் இட்டிருக்குதோ
பறைச்சி போகம் வேறதோ பனத்திபோகம் வேறதோ
பறைச்சியும் பனத்தியும் பகுத்துப் பாரும் உம்முளே (35)

சாதி ஆவதேதடா சலந்திரண்ட நீரெலாம்
பூத வாசல் ஒன்றலோ பூதம் ஐந்தும் ஒன்றலோ
காதில் வாளி, காரை, கம்பி, பாடகம் பொன் ஒன்றலோ?
சாதிபேதம் ஓதுகின்ற தன்மை என்ன தன்மையே (42)

**நீர்ச் சடங்குகள் :** வாயிலே குதித்த நீரை எச்சிலென்று சொல்கிறீர்
வாயிலே குதம்புவேதம் வரம் எனக் கடவதோ
வாயில் எச்சில் போகவென்று நீர்தனைக் குடிப்பீர்காள்
வாயில் எச்சில் போன வண்ணம் வந்திருந்து சொல்லுமே (36)

நீரை அள்ளி நீரில் விட்டு நீர் நினைந்த காரியம்
ஆரை உன்னி நீரெலாம் அவத்திலே இறைக்கிறீர்
வேரை உன்னி வித்தை உன்னி வித்திலே முளைத்
தெழும்
சீரை உன்ன வல்லீரேல் சிவபதங்கள் சேரலாம் 157

நீரில் மூழ்கல் :
காலை மாலை நீரிலே மூழ்கும் மந்த மூடர்காள்
காலை மாலை நீரிலே கிடந்த தேரை என் பெறும்?
காலமே எழுந்திருந்து கண்கள் மூன்றில் ஒன்றினால்
மூலமே நினைப்பாராகில் முத்தி சித்தி யாகுமே 122

தேர்விழா :
ஊரிலுள்ள மனிதர்காள் ஒரு மனதாய்க் கூடியே
தேரிலே வடத்தை விட்டு செம்பை வைத்து இழுக்கிறீர்
ஆரினாலும் அறியொணாத ஆதிசித்தநாதரை
போரிலான மனிதர் பண்ணும் புரளிபாரும் பாருமே 230

கபடக் குருமார்
சட்டையிட்டு மணிதுலங்கும் சாத்திரச் சழக்கரே
பொத்தகத்தை மெத்தவைத்துப் போத ஓதும்
பொய்யரே
நிட்டை ஏது ஞானமேது? நீரிருந்த அட்சரம்
பட்டை ஏது சொல்லிரே பாதகக் கபாடரே 235

சிவவாக்கியார், சமயத்தின் பெயரால் சாதியப் பண்பாட்டில் இடம் பெற்றிருந்த அனைத்துப் பொய்யான மரபு பழக்க உணர்வு களையும் செயல்களையும் கேலிசெய்கிறார். மேலும், ஆழ்ந்த ஆன்மீகத்தத்துவ அறிவுப்பாங்கும் அவர் பாடல்களில் இழையோடு வதைக்காணலாம். கேலி என்பது கூட நுட்பமாக, கூர்மையாக இடம் பெற்றுள்ளது. உள்ளார்ந்த உண்மைக் குரல்களாக ஆற்றல் கொண்ட கவிதைகளாக இருக்கும் தன்மையை, சொல்லாளுகைத் தோரணைகள் மூலம் அறிந்துகொள்ளலாம். சங்ககால முடமோசி யாருக்குப்பின் ஆற்றல் வாய்ந்த சமூகநீதிக்குரல் சிவவாக்கியாரின் குரலே எனலாம். சிவவாக்கியார் போலச் சாதியப் பண்பாட்டு எதிர்ப்பு வேறு சித்தர்களிடமும் வெளிப்பட்டுள்ளது. அப்பர், கம்பன் போன்றோரும் சாதி - சமய வேறுபாடுகளை விமர்சித் துள்ளனர்.

''காலையின் நறுமலர் ஒன்றக்கட்டிய
மாலையின் மலர்புரை சமய வாதியர்
சூலையின் திருக்கலால் சொல்லுவார்க்கெல்லாம்
வேலையும் திரையும்போல் வேறுபாடிலான்'' (யுத்த 3; 77)

எனக்கம்பன், வேறுபாடுகளைக் கடந்தவன் இறைவன் எனக் கூறுகிறான்.

> ' சாத்திரம் பலபேசும் சழக்கர்காள்
> கோத்திரமும் குலமும் கொண்டென் செய்வீர்''

என்று அப்பர் மிக அழுத்தமாகவும் நேரடியாகவும் விமர்சிக்கிறார். இவற்றிலும் கூரிய சொற்கள் உள்ளன. ஆயினும் இவை, மிகவிரிந்த இறையனுபவ வெளியீட்டின் முன் சிறுபகுதியாகவே உள்ளன. காரணம் அப்பரின் காலம் வேறு; சமூகஅநீதியே காலநியதியாகி விட்ட சித்தர்களின் காலம் வேறு. எனவேதான் எதிர்ப்பானது, மிகக் கூர்மையாகக் கேலித் தொனியுடன் சித்தர் பாடல்களில் வெளிப்பட்டுள்ளது. ஆனால் வெறும் கால வேறுபாடு மட்டும் கவித்துவ ஆற்றலுக்குக் காரணமாகி விடமுடியாது. கவித்து முடைய தனிநபரின் படைப்புத் திறனும் மிகமுக்கிய காரணமாகும். சித்தர்களிலே கூடச் சிவவாக்கியரைத்தான் பெருங்கவிஞனாகக் காணமுடிகிறது. மேலும் இது ஒரு படைப்பாளியின் அனுபவம் ஆளுமை ஆகியவற்றையும் பொறுத்தது.'' ''சூலையின் திருக் கலால்'' என்று கம்பனையும்விட மென்மையாக, 18ஆம் நூற்றாண் டில் தோன்றிய தாயுமானவர் அதேகருத்தை வெளிப்படுத்துகிறார்.

> ''வேறுபடும் சமயம் எல்லாம் புகுந்துபார்க்கின்
> விளங்கு பரம் பொருளே! நின்விளையாட்டு அல்லால்
> மாறுபடும் கருத்து இல்லை....' (கல்லாவின். 25)
>
> ''தர்க்கமிட்டுப் பாழ் ஆம் சமயக் குதர்க்கம் விட்டு
> நிற்கும் அவர் கண்டவழி நேர் பெறுவது எந்நாளோ''
> (எந்நாட். 1252)

சமயவாதங்களைக் கடந்த மனித ஒருமையில் இறைமையை அடையாளங் காட்டும் கவிஞன், சமூக வாழ்வின் சமத்துவமான, அறிவுநிறைந்த, அன்புநிறைந்த வாழ்க்கை முறைபற்றிய ஓர் இலட்சியப் புனைவாக்கத்தில் ஈடுபட்டு அதனை எழுத்தாக்கி யுள்ளான். எல்லோருக்குமான நீதி என்பது எல்லோருடைய வாழ்வும் இனிமையாக, வளமாக இருப்பதில்தான் வெளிப்படும். இத்தகைய வாழ்வுக்கு 'அரசு' என்ற அமைப்பே அடிப்படை என்பதைக் கம்பன் உணர்ந்து கூறுகிறான். நியாயமான, நீதியான அரசே அறம்காக்கும் அரசு எனப்படும். கோசலநாடு அத்தகைய அரசு இருக்கும் நாடு.

"முறைஅறிந்து அவாவைநீக்கி முனிவுழிமுனிந்து வெஃகும்
இறைஅறிந்து உயிர்க்குநல்கும் இசைகெழு
வேந்தன்காக்கப்
பொறை தவிர்ந்து உயிர்க்கும் தெய்வப்பூதலம்..."
(பால. 2 : 19)

கோசல நாட்டின் தலைவன் தயரதன், தன் நாட்டை, வறியவன் காத்துவரும் சிறிய நிலம்போலக் கண்ணுங் கருத்துமாய்க் காத்து வந்தான் என்பான்.

"வையகம் முழுதும்வறிஞன் ஓம்புமோர்
செய் எனக் காத்து இனிதரசு செய்கின்றான்"
(பால. 4 : 12)

இத்தகைய அரசு நிகழும் நாட்டில், மன்னன் உயிர்களைத் தன் உயிர்போல எண்ணி ஆள்கின்றான். அவனுடைய உடல்மட்டுமே அவனுக்கு. அவன் உயிர் என்பதோ மக்களே. இவ்வாறு மக்களும் அரசும் ஒன்றில் ஒன்று உயிர்மைத் தொடர்பு கொண்டிருப்பதைக் கம்பன் காட்டுகிறான். இத்தகைய சூழல் இருக்கும் நாட்டில் பரத்தையர் மனமும் ஒருவழிப்பட்டுவிடும். சமநீதி நடக்கின்ற சமூக ஆட்சிப் பின்னணியில், முறைகேட்டிற்கோ ஒழுக்கக் கேட்டிற்கோ இடமில்லை.

"உயிர்எலாம் தன் உயிர் ஒப்பஓம்பலால்
செயிர்இலா உலகினில் சென்று நின்றுவாழ்
உயிர்எலாம் உறைவதோர் உடம்பும் ஆயினான்"
(பால. 4 : 10)

தசரதன் மகன் நாடாளும் தலைவனாகப்போகிறான் என்று கேட்டபோது மக்கள் மகிழ்கின்றனர்.

"பாவமும் அருந்துயரும் வேர்பறியும் என்பார்
பூவலயம் இனிதனி அன்று; பொது என்பார்"
(அயோத்தி. 3 : 102)

பொதுநீதியின் சின்னமாக இராமனை, கம்பன் இலக்குபடுத்திக் காட்டுகின்றான். இத்தகைய நாட்டில் வறுமை இல்லை; குற்றமில்லை. பொய் இல்லை. பெண் கல்வி இருக்கிறது. உணவுப் பொருள் மிகுதியாக இருக்கிறது. கல்வி, அறிவு, ஆன்மீக உணர்வு, சமத்துவவாழ்வு, அன்புநெறி, - ஆகியவற்றின் அடிப்படைகளோடு

எல்லோரும் சமமான சமூகநிலைபெற்று வாழ்கின்ற உயர்வாழ்வு நெறியைக் கற்பனை செய்து படைக்கின்றான் கம்பன்.

"ஏகம்முதல் கல்வி முளைத்தெழுந்து எண்ணில் கேள்வி
ஆகம் முதல் திண்பணைபோக்கி, அருந்தவத்தின்
சாகம் தழைத்து அன்பரும்பி தருமம் மலர்ந்து
போகங்கனி ஒன்று பழுத்தது போலுமன்றே"
(பால. 3 : 74)

சமூகத்திலுள்ள அனைத்து நிலைகளும் நிறைவு பெற்றிலங்கக் கூடிய பொதுநீதிபற்றிய இலட்சியப்புனைவாக்கமாகக் கம்பன் கவிதைபடைத்துள்ளான். இதனையே அறம் என அழைக்கின்றான். இதற்கெதிரானதே பாவம். பாவத்தின் வடிவமே இராவணன். இராமாவதாரக்கதையை இவ்வாறு சமூகநீதி உணர்வோடு இணைத்துக்காட்டுகின்றான் கம்பன். கம்பனுக்குப்பின், சமய ஒருமை – இறை ஒருமை என்ற அளவில் தாயுமானவர், இராமலிங்கர் மற்றும் பலர் எழுதியிருப்பினும் கம்பனின் கொள்கைப் புனைவு யாரிடமும் இல்லை. ஆனால் "கருணையிலா ஆட்சி ஒழிக" என்று இராமலிங்கர் கூறுகிறார்.

காளமேகப்புலவன்கூட ஒருபாடலில் மக்கள்படும் அவலத்தைக் காட்டுவதன்மூலம், அநீதியைச் சுட்டிக்காட்டுகின்றான்.

"தண்டாங்கூர் மாசனங்கள் சற்குணர்நீர் என்றிருந்தேன்
பண்டங் குறையவிற்ற பாவிகாள் - பெண்டுகளைத்
தேடியுண்ணவிட்டீர் தெருக்கள் தெருக்கள் தோறும்
ஆடிமுதல் ஆனிவரைக்கும்" (203)

பங்கிட்டு அநீதியைக்காட்டும் பாடல் இது. ஆன்மீகச் சிந்தனையாளர்கள், குறிப்பிட்ட ஒரு சமயச் சார்பிலிருந்து விலகி நிற்பது உள்ளார்ந்த நீதி உணர்வின் வெளிப்பாடாகும்.

சமயச் சச்சரவுகளிலிருந்து விலகும் நிலையே, சமூக வாழ்வில் சமய நிறுவனத்திற்குத் துணைபோகாத மனநிலையாகும். எனவே தான்,

"எவ்வுயிரும் என் உயிர்போல் எண்ணி இரங்கவும் நின்
தெய்வ அருள் கருணை செய்யாய் பராபரமே"
(பராபரக் : 65)

எனத் தாயுமானவரால் பாட முடிகிறது. தேவார காலத்துப் பக்தி இயக்கத்தின் அன்புநெறியையே சமூகவாழ்வு முறையாக வேண்டும் என மனிதாபிமான அடிப்படையில் தாயுமானவர் கூறுகிறார் பத்தொன்பதாம் நூற்றாண்டின் இறுதியில்தோன்றிய இராமலிங்க அடிகளும் இதே மரபினர் எனலாம். ஆயினும், இவர் முற்றிலும் பழைய கோயில் பண்பாட்டு வழிமுறையிலிருந்து விலகிய ஜோதி (ஒளி) வழிபாட்டினை அறிமுகப்படுத்தி, சீர்திருத்த இயக்கமாகவும் செயல்பட்டுள்ளார். பழைய ''நிலப்பிரபுத்துவம் ஈன்றெடுத்த பேய்க் குழந்தைகளாகிய சாதிப்பூசல் - சமயப்பூசல் என்னும் கொடு மைகளைச் சாடிப்பாடுவதையே கொள்கையாகக் கொண்டிருந்தார் வள்ளலார். நிலப்பிரபுத்துவத்தின் காவலர்களான புரோகித வர்க்கத்தினரின் கொடுமைகளிலிருந்து ஏதுமறியாத அப்பாவி மக்களை விடுவிக்க முயன்றார். 'போதித்தசமயமெல்லாம் பொய் பொய்யே! அவற்றில் புகுத்தாதீர்' என்று கூறிமக்களை எச்சரித் தார். அவ்வகையில் அவர் இயற்றிய சீர்திருத்தப்பாடல்கள், நிலப் பிரபுத்துவக் காவல் அரண்கள் மீது வீசிய வெடிகுண்டுகளாகும்'' எனச் சிலம்புச்செல்வர்,[18] இராமலிங்க அடிகளின் சமூகநீதி உணர்வு பற்றி விளக்கிக் கூறுவது முற்றிலும் பொருத்தமானது. சன்மார்க்க சங்கத்தைத்தோற்றுவித்து அன்புநெறியை வலியுறுத்திய வள்ளலார் கூட,

''கருணையிலா ஆட்சி கடுகி ஒழிக
அருள்நயந்த நன்மார்க்கர் ஆள்க...''

(திருவருட்பா பாராயணத் திரட்டு : பக். 151)

என நல்லாட்சி அமைப்பு வேண்டும் என்கிறார். அப்போதுதான் 'எல்லோரும் இசைந்து வாழ' முடியும் என்கிறார். எல்லோருடைய நல்வாழ்விலும் அக்கறை காட்டும் இந்த அன்புப்பார்வையே வள்ளலார் காட்டும் சமூகநீதிக்கான அணுகு முறையாகும்.

''ஒத்தாரும் உயர்ந்தாரும் தாழ்ந்தாரும் எவரும்
ஒருமையுளராகி உலகியல் நடத்த வேண்டும்''

(திரு. பா. தி. பக். 143)

''இச்சாதி சமய விகற்பங்களெலாந் தவிர்ந்தே
யெவ்வுலகும் சன்மார்க்கப் பொதுவடைதல் வேண்டும்

(திரு. பா. தி. பக். 143)

---

18. ம. பொ. சிவஞானம், இலக்கியத்தில் சோஷலிசம், ப. 61

முன்னைய சமய வேறுபாடுகள் நீதிக்கு எதிரானவை என்கிறார் வள்ளலார்.[19] அப்பர், கம்பன், தாயுமானவர், இராமலிங்கர் போன்றோர் அன்புநெறி வழிச் சமூக ஒருமையையும் சமூக நீதியையும் மென்மையாகப் புலப்படுத்தினர். இறை அனுபவஞ்சார்ந்த ஆன்மீக உள்முகப்பார்வை (Introspection)யே இவர்களிடம் பெரிதும் வெளிப்பட்டிருந்தாலும், சமூகநீதி, உலகியல் நன்மை ஆகியன பற்றிய உள்ளுணர்வோடு இணைந்தே வெளிப்பட்டுள்ளது.

ஆனால், சமூகநீதி என்பது சமய இடைக்காலத்தில் தத்துவ சார மையத்தின் வட்டத்திற்குள்ளடங்கியே இடம் பெற்றிருந்தது. ஆங்கிலேயரின் புதிய தொழிலிய முதலாளித்துவம் (Industrial Capitalism) உற்பத்திமுறையும் அதுசார்ந்த சமூக உறவு முறைகளும் உருவாகத் தொடங்கிய பிறகே சமூகநீதிக் குரல் சமய-தத்துவ எல்லையைவிட்டுப் புதிய நோக்கில் ஒலிக்கத்தொடங்கிற்று. முன்னரே எடுத்துக்காட்டப்பெற்றுள்ள, தற்காலச் சமூக நீதிக் குரலின் நான்கு அடிப்படைகள் மீண்டும் இங்கே நினையத் தக்கன. அவை : (1) அறிவியல் ஓர்மை (2) சமூகதத்துவப் பார்வை (3) வர்க்கப் போராட்டம் (4) அரசியல் பார்வை. இனி, இருபதாம் நூற்றாண்டுக்குள் சென்று பார்க்கலாம்.

---

19. பன்னெறிச் சமயங்கள் மதங்களென்றிடுமோர்
    பவநெறியிதுவரை பரவியதினால்
சென்னெறி யறிந்திலரிறந்திறந் துலகோர்
    செறியிருளடைந்தனராதலி னினிநீ
புன்னெறி தவிர்த்தொரு பொதுநெறியெனும்வான்
    புத்தமுதருள்கின்ற சுத்தசன்மார்க்கத்
தன்னெறி செலுத்துக வென்றவென் னரசே
    தனிநடராஜ வென்சற்குரு மணியே
        —திருவருட்பா பாராயணத் திரட்டு, பக். 151

சாதியிலே மதங்களிலே சமயநெறிகளிலே
    சாத்திரச் சந்தடிகளிலே கோத்திரச் சண்டையிலே
ஆதியிலே யபிமானித்தலைகின்ற வுலகீர்
    அலைந்தலைந்து வீணேநீரழிதலழகலவே.
நீதியிலே சன்மார்க்க நிலைதனிலே ஞான
    நிருத்தமிடும் தனித்தலைவரொருத்தரவர் தாமே
வீதியிலே யருட்சோதி விளையாடல் புரிய
    மேவுகின்ற தருணமிது கூவுகின்றே னுமையே''
        —மேலது பக். 166

# இருபதாம் நூற்றாண்டு : சமூகப்பின்னணி

ஆங்கிலேயர் ஆட்சி ஏற்படுவதற்குமுன்பு, மன்னர்களாட்சியில், பல்வேறு அதிகார அரசு மாற்றங்கள் நிகழ்ந்திருந்தாலும், அடிப்படையான பிரபுத்துவ - சாதீயச் சமூகப் பின்னணியில் மாற்றம் எதுவும் நிகழவில்லை. பிற்காலத்து நாயக்கர் காலத்து ஆட்சிக் காலத்தில் பழைய சமூகப் பிணிப்பு மேலும் இறுகியது; சாதீயம் என்பது மக்களை ஒடுக்கும் வலிமை மிக்கசக்தியாகப் பெரிதும் வளர்ந்துவிட்டது. இந்த வலுவான அடிப்படைச் சமூகப் போக்கினூடேதான் ஆங்கிலேயரின் வருகை, பெரியதொரு மாற்றமேற்படுத்தும் சக்தியாகியது.

புதிய அறிவியல்-தொழிலிய வளர்ச்சியை ஒட்டி, தங்களுடைய வணிகச்சந்தையை விரிவாக்கும் நோக்கில், ஐரோப்பியர், புதிய நீராவிக் கப்பல்களுடன் கடல்வழிகளைக் கண்டுபிடித்து, விரிந்த நிலப்பரப்புகளைக் கவர்ந்து கொள்ளும் செயலை 15, 16-ஆம் நூற்றாண்டுகளிலேயே தொடங்கிவிட்டனர். நன்னம்பிக்கை முனை வழியே போர்த்துக்கீசியர் இந்தியாவுக்கு வழிகண்டு பிடித்ததைத் தொடர்ந்து ஐரோப்பியர்களின் இந்திய வருகை பெருகியது.[1] தொடக்க நாட்களில், தங்கள் வணிகத்திற்கான சிறுசிறு சலுகைகளையே ஐரோப்பியர், இந்திய அரசர்களிடம் பெற்றனர். சலுகைகள் பெறுவதில் தொடங்கி, காலப் போக்கில், தங்களது புதிய ஆயுதங்களால், இந்திய ஆட்சி உரிமையையும் எடுத்துக்

---

1, Dhires Bhattacharya; A Concise History of Indian Economy P. 40.

கொண்டனர். அவர்களுக்கெதிராக நடந்த பல்வேறு கிளர்ச்சி களையும் முறியடித்து ஆட்சியை நிலைநிறுத்திக்கொண்டனர்.

ஆங்கிலேயருடன் இந்தியாவுக்கு வந்த முக்கியமான சக்தி தொழிலிய முதலாளித்துவமாகும் (Industrial Capitalism). பல்வேறு ஆலைகளும் அவற்றிற்கான கருவித்தொழிற்சாலைகளும் எனப்புதிய காலப்பெருஞ் சக்திகளாக உருவெடுத்து ஐரோப்பாவில் வளர்ந்திருந்த தொழிலியம் இந்தியாவிற்குள் நுழைந்தது. வெளி நாட்டுத் தயாரிப்புகளுக்குரிய சந்தையாகவும், மூலப்பொருள் கிடைக்குமிடமாகவும் மாறியஇந்தியா, ஐரோப்பிய முதலாளிகளின் அடிமையாகியது. நவீன தொழில் முறைஉற்பத்தி முறைமையால், பழைய மரபான பிரபுத்துவப் பொருளாதார உற்பத்தி முறைமை சார்ந்த தொழில்கள் முக்கியத்துவமிழந்து சிதறுண்டுபோயின. இதனால், பழையஉற்பத்தி முறைசார்ந்த சமூக உறவுகளும் - (கிராமச் சமூகம், சாதி, கூட்டுக் குடும்பம் சார்ந்தவை) விரிசல் பெறத் தொடங்கின.

ஆயினும், சில வளர்ச்சி நிலைகளும் ஏற்படாமலில்லை. வணிக முறை பெருகியது. 1813 முதல் வணிகப் பெருக்கம் மிகுந்து வந்தது. 1839இல் 4.97 கோடி மதிப்பாக இருந்த வணிகம், 1859இல் 15-37 கோடியாக வளர்ந்தது. 1869இல் சூயஸ் கால்வாய் திறக்கப்பெற்ற பிறகு மேலும் பெருகியது. இந்த வணிக வளர்ச்சிச் சூழலில் இந்தியாவின் நிர்வாகமுறையும், கல்விமுறையும், போக்கு வரத்து முறையும் முற்றிலும் மிகப் பெரிய அளவில் மாற்றமுற்றன. வருமான நிர்வாகத்திற்கேற்ற சட்ட,நிதிநிறுவனங்கள் தோன்றின. இவற்றில் பணியாற்றுகின்ற அலுவலர்களை உருவாக்குவதற்கேற்ற மெக்காலே கல்விமுறை 1835இல் அறிமுகப்படுத்தப்பட்டது. இதைத் தொடர்ந்து, பல்வேறு கல்வி நிலையங்களும் பாடமுறை களும் பணி முறைகளும் தோன்றி இந்தியாவில் எப்போதுமில்லாத அளவில் கல்வி பரவியது. தொழிலிய வேலை முறைமையில் இலாபமே முதன்மை, சாதியல்ல, ஆதலால் கல்வி அனைவர்க்கும் கிடைக்கும் வகையில் விரிவுபடுத்தப்பெற்றது. 1849இல் அறிமுக மான இரயில்வே போக்குவரத்து நாடெங்கும் பரவலாகித் தொழிலிய வளர்ச்சியைவிரைவுபடுத்தியது. Departmental Revolution என்று அந்தக்காலத்தில் அழைக்கப்பெற்ற (ஸ்டாம்ப்) முத்திரை முறை 28-2-1856இல் டல்ஹௌசி காலத்தில் அறிமுகப் படுத்தப்பட்டது.[2] போக்குவரத்து வளர்ச்சியுடன் தகவல்தொடர்பு

2. Ibid P. 41.

முறையும் வளர்ச்சியுற்றது. இவையாவும், உடனடிப் பணத்தை அடிப்படையாகக் கொண்ட புதியபொருளாதார அமைப்பு முறையினால் விளைந்த நிறுவன வளர்ச்சிகள். இதுபற்றிச் சமூகவியலாளர் திருமலை இவ்வாறு கூறுகிறார் :

1. "உள்நாட்டுச் சந்தைப் பெருக்கம் இதனுடன் இணைந்த இரயில் மற்றும் சாலைப்போக்குவரத்துத் துணையுடனும், வெளிநாட்டு வேளாண்மைச் சரக்கு வணிகத்துடனும் கூடிய ஒரு புதிய சக்தியாகி, பண்டமாற்றை அடிப்படையாகக் கொண்ட பழைய தன் தேவைப் பூர்த்திப் பொருளாதாரத்தை, உடனடிக்காசை (Cash) அடிப்படையாகக் கொண்ட சந்தைப் பொருளாதாரத்திற்கு மாற்றி அமைத்தது."[3]

2. "கிராமம் மெல்லமெல்ல நகரியப்படுவதன் மூலம் (உழைப்பு) வேலைப் பிரிவினையின் கெடுபிடி தளர்ச்சியுறலாயிற்று. பொருளாதார இயங்கு நிலைக்குத் தடையாகும் சாதிக்கட்டுக்கள் மெதுவாக விலகிக் கொண்டுவந்தன".[4] சாதீயக் கொடிய நடைமுறைகள் (Caste Depotism) தளர்வு பெறலாயிற்று.

3. "புதிய வணிக வாய்ப்புகளும், நகரிய விரிவாக்கங்களும் நகரக் கவர்ச்சிகளும் சேர்ந்து நகர் நோக்கிய கிளைபிரிந்த ஓட்டப் போக்கை நிலைப்படுத்தியது. இதுவே, கூட்டுக் குடும்ப அமைப்பின் ஆதிக்க வலு, அதன் உறுப்பினர்களிடையே குறையக் காரணமாகியது."[5]

4. "பெண்களின் தகுதி நிலையில் முன்னேற்றம் ஏற்பட்டது திருமணவயது அதிகரித்தது."[6]

மேற்கண்ட குறிப்புக்களிலிருந்து, சமூகமாறுதல் போக்கு நிகழ்ந்து கொண்டிருந்த காலச்சூழலை நன்றாக உணர்ந்து கொள்ளலாம். இந்தச் சூழலில், அரசு அதிகாரத்தைத் தங்களிடம் வைத்துக்கொண்டு ஆங்கிலேயர் இந்தியாவைத் தங்கள் நலனுக்கு ஏற்பச்சட்டங்களும் நீதிமுறைகளும் கொண்டு ஆட்சி செய்து வந்தனர். இதற்கு எதிராகவே இந்திய விடுதலை இயக்கங்கள் உருவாயின. இந்திய தேசிய காங்கிரஸ் இயக்கம் பெரு வளர்ச்சி பெற்று வந்த பின்னணியில் இந்தியா விடுதலை அடைவதற்கு

---

3. S. Thirumalai; Trends in Rural Change - Rural Sociology P. 691.

4-6 Ibid

முன்பே விடுதலை இயக்கத்தில் பங்கெடுத்தோர்களிடையே கருத்து வேறுபாடுகள் தோன்றிவிட்டன. புதிய தொழிலியத்தால் உருவான பெரிய அளவிலான தொழிலாளிவர்க்கம் பொது வுடைமைக் கோட்பாட்டுடன் தனிச்சக்தியாக உலகெங்கிலும் வளரத்தொடங்கி 1917இல் இரஷ்யாவில் பொதுவுடைமை ஆட்சி யையும் ஏற்படுத்தியது.

இதன் தாக்கத்தால் 1925 முதல் இந்தியாவிலும் பொது வுடைமை இயக்கம் வேரூன்றத் தொடங்கியது. ஏராளமான பணத்தை இலாபமாக ஈட்டித்தரும் தொழிலியப் பின்னணியில், இந்திய விடுதலை இயக்கம் நடத்திய காங்கிரஸ் இயக்கத்தில் மரபு வழிச் சாதீயம் கால்பதிக்கவே, சாதீயத்திற்கு எதிராகக் காங்கிரஸ் இயக்கத்திலேயே எதிர்ப்புக் குழுக்கள் தோன்றலாயின. ஆனால், இவ்வெதிர்ப்பியக்கம் கட்சிப்போக்கில் எதுவும் செய்ய முடியாமல் போகவே, தனியாக அது திராவிட இயக்கம் என்ற பெயரில் வளர்ச்சி பெறலாயிற்று.

காங்கிரஸ் இயக்கத்தில் ஒரு தலைவராக இருந்த ஈ.வெ.ரா. பெரியார், காங்கிரஸ் இயக்கத்துக்குள் இருந்த சாதீயத்திற்கு எதிராகப் போராடினார். வகுப்புவாரிய பிரதிநிதித்துவம் கேட்டார். பின்னர், காங்கிரஸ் போக்குப் பிடிக்காமல் 1926இல் வெளியேறினார். 1939இல் பெரியார் திராவிடநாடு கோரிக்கையை முன்வைத்ததிலிருந்து முழுமையான திராவிட இயக்க உணர்வு கிளர்ந்தெழலாயிற்று.[7] 1916ஆம் ஆண்டிலேயே இந்தச் சாதீய எதிர்ப்புணர்வின் மூலஇயக்கங்கள் தொடங்கிவிட்டன.

இருபதாம் நூற்றாண்டின் தொடக்க காலச் சமூக - அரசியல் - பொருளாதாரப் பின்னணி இந்தியச் சூழலுக்கு முற்றிலும் புதியது. பழைய பொருளாதார அமைப்பு மாறுகிறது. புதிய சுதந்திர இந்தியா என்ற விழிப்புணர்வு தோன்றுகிறது. பழைய சாதி, சமய வேறுபாடு பற்றிய விமர்சனங்கள் தோன்றுகின்றன. சமூக இயங்கு முறைமையில் சாதி - சமயக் கட்டுப்பாடுகள் தளர்வு பெறுகின்றன. இம்மாற்றங்கள் பலவாறு ஏற்படினும், ஆங்கிலே யரின் ஆதிக்கப் பின்னணியில் எதுவும் இந்திய வளர்ச்சிக்கெனத் திட்டமிட்டுச் செய்ய முடியாத நிலை தோன்றுகிறது. புதிய விடுதலை இயக்க மாறுதல் போக்குகளினூடே பழைய சாதீய

---

7. A. N. Sattanathan; The Dravidian Movement in Tamilnadu and its Legacy; P. 20.

சக்திகளும் முனைப்பாக எழத்தொடங்குகின்றன. இதனால் அரசியல் குழப்பங்கள் தோன்றுகின்றன. முற்றிலும் புதிய, சமூக - அரசியல் தத்துவமான பொதுவுடைமைக் கருத்தியலும் இயக்கமாக எழுச்சி பெற்று வளரலாயிற்று. இவ்வாறு, மாறிவந்து கொண்டிருந்த பின்னணியில் இந்திய தேசிய இயக்கம், திராவிட இயக்கம், பொதுவுடைமை இயக்கம் - ஆகிய மூன்று இயக்கங்கள் மிக வலுவான தளம் கொண்டு தமிழ்நாட்டில் பரவி செல்வாக்குப் பெற்றிருந்தன. சமூக உணர்வு, சமூக ஓர்மை, சமூகநீதி ஆகியன சார்ந்து எழுதும் படைப்பாளிகளுக்குரிய பின்னணியாக இம்மூன்று பெரும் இயக்கங்களே விளங்கின எனலாம்.

காங்கிரஸ் இயக்கத்தின் நோக்கம் பெரிது. எல்லோருக்கும் கல்வி, எல்லோருக்கும் வளவாழ்வு, எழுத்துரிமை, பேச்சுரிமை, மதஉரிமை, சமத்துவம், சுரண்டலற்ற பொருளாதார அமைப்பு— ஆகிய குறிக்கோள் சார்ந்தே இயங்கின. இந்திய அரசியல் சட்ட விதியை 1950இல் விடுதலை இந்தியாவில் ஆட்சிக்கு வந்த காங்கிரஸ் இயக்கம் கீழ்க்கண்டவாறு சட்டமாக்கியது.

"The state shall in particular, direct its policy towards securing (a) that the citizens men and women equally, have the right to an adequate means of livelyhood. (b) that the ownership and control of the material resources of community are so distributed as best to subserve the common good. and (c) that the operation of economic system does not result in the concentration of wealth and means of production to the common detriment."

(State Policy - section 39)

1. அரசு, ஆண் பெண் இருபாலரும் சமமாக, வாழ்க்கை நடத்துவதற்குரிய போதுமான வசதி பெறும் உரிமையைப் பெறும் வகையில், தனது கொள்கையைக் கொண்டு செல்ல வேண்டும்.
2. பொது நன்மைக்கேற்ப, இயற்கை வளத்தின் சொத்துரிமையையும் கட்டுப்பாட்டையும் பங்கிடுவதில், பொது நீதி இருக்குமாறு கொண்டு செல்லவேண்டும்.
3. பொருளாதார அமைப்பானது பொதுச்சீரழிவுக்கு வழி வகுக்காத வகையில், அரசு அதன் கொள்கையைச் செயல்படுத்த வேண்டும்.

பங்கீட்டு நீதி பற்றிய தெளிவான விளக்கங்களோடேயே உயர்ந்த சமநீதிச் சமூகத்தை உருவாக்கும் எண்ணங்களுடனேயே காங்கிரஸ் இயக்கம் புதிய இந்திய எழுச்சியாக இருந்தது. எனவே தான் சி, சுப்பிரமணியபாரதி, விடுதலை இயக்க நோக்கு கொண்ட நாட்டுப் பற்றினை 'சர்வசுபங்களுக்கும் மூலாதாரமாகிய தேசபக்தி என்ற நவீன மார்க்கம்'[8] என்று கூறினான்.

இத்தகைய இயக்கத்திற்குள்ளிருந்த மேல் - கீழ் என்ற சாதீய உணர்வு, அரசியல் குழப்பத்திற்குக் காரணமாகியது. இயக்க வாழ்விலும் அதிகார முறைமையிலும் எல்லா வகுப்பாருக்கும் பிரதிநிதித்துவம் வேண்டும் என்ற பங்கீட்டு உணர்வு திராவிட இயக்கத்தைத் தோற்றுவித்தது. இந்த இயக்கம் மேல்சாதி உணர்வு களைக் கடுமையாகச் சாடியது. மேல்சாதீயியமும் சமய நம்பிக்கை யும் புராணிகமும் இணைந்து மக்களை மூடர்களாக்கி, என்றென்றும் அடிமைகளாக்கியுள்ளன; எனவே இவற்றிற்கெதிரான சமூக - பண் பாட்டு மாறுதல்களை உள்ளடக்கிய புதிய விழிப்புணர்வே தேவை. இது நடைமுறையில் ஏற்புடையதாகும் போது சமத்துவம் உருவாகி விடும் என்றது திராவிட இயக்கம். பழைய சமுதாய அமைப்பின், சாதீயம் - சமயம் சார்ந்த அநீதிக் கூறுகளைப் புதியகாலப் பின்ன ணியுடன் பெரியார் எதிர்க்கிறார் :

"நாட்டில் பார்ப்பன ஆதிக்கத்திற்கும் மக்களை மக்கள் ஏமாற்றிக் கொடுமைப்படுத்துவதற்கும், மற்ற நாட்டார்கள் போல் நம் நாட்டுமக்களுக்குப் பகுத்தறிவு விசாலப்படாமல் இருப் பதற்கும், மக்களின் ஒழுக்கங் குன்றி, மக்களிடத்தில் மக்களுக்கு அன்பும் உபகாரமும், இல்லாமல் இருப்பதற்கும், கடவுள் என் பதும் அதன் சமயமும், சமயாச்சாரியார்கள் என்பவர்களும், அவர் களது பாடல்களும் நெறிகளுமே காரணம். கடவுள் - மத மூட நம்பிக்கைகள் ஒழியச் செய்யும் காரியத்தை நாத்திக மென்றும், பாபகாரியமென்றும் கூறுவது, பகுத்தறிவற்ற பாமர மக்களை ஏமாற்றி ஏமாற்றிச் சுரண்டிப் பிழைப்பவர்களின் சுயநலப் புரட்டே ஆகும்."[9]

சமயம், மூடநம்பிக்கை, கடவுள், மேல் சாதீயம், சுரண்டல் ஆகியவை ஒன்றுக்கொன்று இணைந்தனவே என்கிறார். சமூக நீதி பற்றிய பெரியாரின் கருத்து, காலங்காலமான பிரபுத்துவ - சாதீய அமைப்புக்கு எதிரான கலகக்குரலாக ஒலித்தது.

---

8. சி, சுப்பிரமணியபாரதி; ஜன்மபூமி; முன்னுரை; 1909
9. ஈ.வே. ரா, பெரியார்; உயர் எண்ணங்கள்; பக் 24 - 25

பொதுவுடைமை இயக்கம், சமூக அமைப்பை, அதன் பொருளாதார அமைப்பை மாற்றுவதே எல்லாவித அநீதிகளுக்கும் சரியானவழிமுறை என்றது. இதுபற்றி எஸ். என். நாகராசன் கூறுகிறார் :

''மார்க்சின் ஆராய்ச்சி அனைத்துமே, கட்டுண்டு, விலங்கினும் கேடாக மாறியுள்ள இம்மானுடப் பிறவியை விடுவிப்பதே அன்றி வேறெதுவுமல்ல. இப்படிக்கட்டுண்ட நிலைக்கு மார்க்ஸ் காரணத்தைக் கண்டார். அது. அவனுடைய - அவனால் - அவனே அறியாமல் உருவாக்கும் பொருளாதார அடிப்படை அல்லது சூழலே, அவனுடைய சகல வகையான இன்ப துன்பங்களுக்கும் அடிமை நிலைக்கும் காரணம் அதுவே என்ற பேருண்மையைத் தெளிவாக்கினார். இனி, இச்சூழலை மாற்றி அமைத்தாலன்றி இவனுக்கு விடிவு கிடையாது என்றார். தத்துவம், உலகை - இவனுடைய இவனுக்கே உரித்தான உலகை-மாற்றுவதற்கே என்றார். அறிவுக்கு இதுவே உண்மைக் குறிக்கோள் என்றார். அறிவு அறிவுக்காகவே என்பதே நவீனகாலத்து விஞ்ஞானிகள் பலரும் பறைசாற்றும் தத்துவம். இத்தத்துவம் மலட்டுத்தனமானது, பொருளற்றது என்பதே மார்க்ஸ் கூறும் உண்மை.''[10]

மனிதன், பல்வேறு வகைகளில் சிக்குண்டு, சிதறி, அந்நியமாகி, சிதைந்து போகின்ற நிலைமைகளுக்கெல்லாம் காரணம், பொருளாதார ஆதிக்கம் சமூகத்தில் செலுத்தும் கொடிய அதிகாரக் கரங்களே எனப்பொதுவுடைமை இயக்கம் பறைசாற்றியது. தொழிலாளர்கள், ஏழைமக்கள், மற்றும் முற்போக்கு எண்ணங்கொண்டோரிடையே பொதுவுடைமை உணர்வும் அதிகம் இடபெறலாயிற்று. சமூக அமைப்பை மாற்றும் புரட்சி எண்ணம் பெரிதும் பரவலாயிற்று.

''காங்கிரஸ், திராவிட இயக்கம், பொதுவுடைமை இயக்கம் என்று பல்வேறு அரசியல் இயக்கங்கள் தோன்றி வளர்ந்து வந்தாலும், இருபதாம் நூற்றாண்டு இந்திய - தமிழகச் சமூக அமைப்பு என்பது சுரண்டலை எதிர்க்காத மாற்றி அமைக்காத நிலையிலேயே கடுமையான பொருளாதாரக் கெடுபிடியுடன் கூடிய சக்தியாக வளர்ந்து வந்தது. இதில் அரசின் சார்புநிலையும், நிர்வாக அதிகார அமைப்பும் பெரும்பாலும் உயர்மட்டத்தினரின் நலனுக்காகவே அமைக்கப்

10. எஸ். என். நாகராசன்; கம்யூனிசம் விடுதலையின் இலக்கணம்; பக். 7-8

பட்டுவிட்டன. எனவே, சமூகநீதி செயல்படுத்தப்படுவதில்லை; என்கிறார் ஒரு சமூக வியலறிஞர்.[11]

ஆக, மேற்கண்ட இயக்கங்கள், அரசுநிர்வாகம் ஆகியவை பற்றிய குறிப்புக்களிலிருந்து, சமூக அநீதியின் அமைப்புக் கூறு களாகக் கீழ்க்கண்டவை இருபதாம் நூற்றாண்டுப் பின்னணியில் இருப்பதைக் காணலாம். (இவற்றில், முதல் நான்கும், இருபதாம் நூற்றாண்டுக்கு முன்பிருந்தே இருந்து வருவன. இவை பற்றி அறிமுகப் பகுதியில் விரிவாக விளக்கப்பட்டுள்ளது.)

1. பொருளாதார ஆதிக்கம்
2. பொருளாதர ஆதிக்கத்தின் சமூக நிறுவனமாக இருக்கும் சாதீய அமைப்பு
3. பொருளாதர ஆதிக்கத்தின் சமூக நிறுவனமாக இருக்கும் கோவில் - சமய அமைப்பு
4. பெண் கீழ்நிலைப்படும் குடும்ப அமைப்பு
5, நிர்வாக அதிகார அமைப்பு
6. அரசின் சார்பு நிலை.
7. பழைய - புதிய முறைமைகலப்பின் குழப்பங்கள்

இவற்றில் நிர்வாக அமைப்பு என்பது முற்றிலும் புதியதான நிர்வாக முறையாகும். அரசின் சார்பு நிலை என்பது, மக்களாட்சி முறை யில் அரசு திட்டமிட்டுச் செயல்படும் நடவடிக்கைகளாகும். இவையே, சமூக அநீதியின் முதன்மை அமைப்புக் கூறுகளாகும். இவற்றிற்கு எதிர்க் குரல்களைக் காலங்காலமாகப் படைப்பாளிகள் வெளிப்படுத்தியுள்ளனர். வெளிப்பாடு என்பது பல்வேறு வகை களில் நிகழ்ந்துள்ளது. கவிஞர்களின் ஆளுமை, அனுபவத்திற்கேற்ப சமூக நீதிக்குரல்கள் வெளிப்பட்டுள்ளன எனலாம்; இத்துடன் கவிஞர்களின் பார்வை நுட்பத்திற் கேற்பவும் கூடக்கவிதை மொழி வேறுபட்ட வடிவம் கொள்ளும் எனலாம். ஆனால், கவிதைகளின் உள்ளடக்கங்கள் மேற்கண்ட சார்புகளிலேயே அமைந்திருக்கும்.

---

11. T H. Dak; Social Frame Work of Social Justice and Egalitarian Ideology (Article). Social Justice and Equality in India p, 41 - 43

# இருபதின் சமூகநீதிக் கவிதை : தடங்கள்

இந்தக் கட்டுரையின் அறிமுகப்பகுதியில் தரப்பெற்றுள்ள, இருபதாம் நூற்றாண்டுக்கு முன்பிருந்த சமூகநீதிக் கவிதைகள் பற்றிய சில குறிப்புகளை நோக்கினோமென்றால், சமூகநீதிக் கவிதையின் வலுவான தளங்கள் பற்றிய கவித்துவ நெறியினை அடையாளங் காணமுடியும். உறையூர் ஏணிச்சேரி முடமோசியார், சாத்தனார், ஆகியோருடைய பாடல்கள் தத்துவ அல்லது கோட்பாட்டு அழுத்தமும் நேரடியான எதிர்ப்புக்குரலும் கலந்து அலங்காரமற்ற மொழியில் வெளியீடாகியிருப்பதைக் காணலாம். இளங்கோ அடிகள், குறிப்பாக (suggestive) உணர்த்துகிறார். சிவவாக்கியார் பாடல்களில் கோட்பாட்டு அழுத்தமும், நுட்பமான எள்ளலும், வலிமையான சொல்லும் கலந்த ஓர் எதிர்ப்பிசை துள்ளுவதைக் காணலாம். அப்பர், தாயுமானவர், வள்ளலார் ஆகியோரின் பாடல்களில் மென்மையும், ஆன்மீக சனநாயகத்துவமும் ஒலிக்கக் காணலாம். இவர்களிடமும் கோட்பாட்டு உள்ளழுத்தம் உண்டு. இவர்கள் அனைவரிடமும் உள்ள ஒரு பொதுத் தன்மை என்னவென்றால், கோட்பாட்டுணர்வும் அலங்காரமற்ற நேரடி மொழியும் கலந்த ஓர் உயர் அனுபவ நிலையாகும். சித்தரிடம் சற்று அதிக வலிமைநிறைந்த வினாக்கள், நிறைந்த எள்ளலுடன் வெளிப்பட்டுள்ளன. காளமேகப்புலவர், சமூக நீதிக்காட்சிகளை விரிவாகக் காண்பிக்காவிட்டாலும், பெண்கள் அலைந்து திரிவதான ஒரு சமூகக் காட்சியைக் கண் முன்னே கொண்டு வரவே செய்கிறார்.

கோட்பாட்டுடன் கூடிய அலங்காரமற்ற நேரடி மொழி, வலிமை வாய்ந்த எள்ளல், சமூகக்காட்சி ஆக்கம் ஆகிய நிலைகளில்

இருபதாம் நூற்றாண்டிற்கு முன் சமூக நீதிக் கவிதைகள் ஆற்ற லுடன் வெளிப்பட்டிருப்பதை அறிய முடிகிறது.

இத்தகைய கவித்துவ நிலைகளைத் தோற்றுவித்த கவிஞர் களின் மனஅமைப்புகள் உருவாவதற்கான சமூக அநீதிச் சூழல், இருபதாம் நூற்றாண்டிலும் தொடர்ந்து வருகிறது. முற்றிலும் மறையவில்லை. மேலும் கூடுதலான சமூக அநீதிநிலைகளும் தோன்றியுள்ளன. இந்த அநீதிகள் பற்றி முன் பகுதியில் விரிவாக விளக்கப்பெற்றுள்ளது.

பண்டமாற்றுப் பொருளாதாரம் மறைந்து உடனடிப் பண மதிப்புப் பொருளாதாரமும் நுகர்வு மனப்பான்மையும் பெருகிய சூழலில் வாழ்க்கையின் போக்கு மிகச்சிக்கலாகவும் பல்வேறு கிளைச் செறிவுகள் (complexities) கொண்டதாகவும் மாறுகிறது. தனி யொருவரின் தன்விருப்ப வெளிப்பாடு என்பது புதியதொரு வெளி யீட்டுச் சக்தியாக புதிய தொழிலியப் பின்னணியில் உருவாகிறது. எனவே தனியார்களின் குரல்கள் ஓங்கி ஒலிக்கத் தொடங்குகின்றன. புதியகாலத் தேர்தல் மக்களாட்சி முறை, மக்களின் கூட்டு நடவடிக் கைகளுக்கான புதிய களங்களை உருவாக்கி வந்தமையால், இந்தச் சூழலுக்கேற்ப, இந்தச் சூழல்சார்ந்த இயக்கங்களின் போக்கிற் கேற்ப, கவிதைக் குரல்களும் புதிய கோணங்கள் பெறலாயின. மிகையான அணி நலமற்ற (அலங்காரமற்ற) பழங்காலச் சமூக நீதிக் கவிதைகளுக்கே உரியதான நேரடி மொழியும் வலியச் சொல்லும் எள்ளலும் தொடர்ந்து வந்ததோடு, புதிய கூட்டு அரசியல் பின்னணியில் கூட்டுக் குரலுக்கேற்ற ஒரு கூவல் தொனியும் பழைய காலத்தினும் அதிகமாகச் சமூகக்காட்சி ஆக்கங்கள் வெளிப் பட்டன. தேர்தல், மக்களாட்சிப் பின்னணியில் மக்களிடையே அழுந்திக்கிடந்த ஆசைகள் கனவுருக்களாகக் கவிதைகளில் வெளிப் படலாயின. இவ்வாறாகப் பழைய தடங்களும் புதிய தடங்களும் கலந்து இருபதின் நீதிக்கவிதைத் தடங்களில் உருவாகின எனலாம்.

இருபதாம் நூற்றாண்டுச் சமூக உணர்வமைப்பை உற்று நோக் கினால், விடுதலைக்கு முற்பட்ட அனுபவங்கள், பிற்பட்ட அனு பவங்கள் என்ற இருபெரும் வேறுபட்ட நிகழ்வமைப்பு(phenomena) இயங்குவதைக் காணமுடியும். விடுதலையின் பிற்கால அனுபவங் களும்கூட கடந்த இருபத்தைந்தாண்டு கால அளவில் மிக முனைப் பான ஓர் இயக்கம் பெற்றுள்ளது எனலாம். ஆயினும், இவ்விடு தலைப் பிற்கால வாழ்க்கையில்தான், முன்னர் எடுத்துக் காட்டப் பெற்ற (1) புதிய நிர்வாக அதிகார அமைப்பு (2) அரசின் மேல்

மட்ட மக்களின் சார்புநிலை ஆகிய இரண்டு சமூக அமைப்புக் கூறுகளும் அநீதியைக் கெட்டிப்படுத்துவதில் தீவிரப் பங்காற்றுகின்றன. ஆக, காலங்காலமான சாதீய - சமயக் குரூரங்களோடு, புதிய கால அரசு நிர்வாக - ஆதிக்கக் கொடூரங்களும் இருபதாம் நூற்றாண்டுத் தமிழ நாட்டுச் சமூக வாழ்வின் சமூக நீதிக்கூறுகளாக நிரம்பிக் கொண்டன.

கவிதை என்பது தனியொருவனின் மனச்சலனத்தின் (Psychic Disturbance) நுட்பமான தளத்தில் உருவாவது. சமூக வாழ்வின் சாரங்கள் தனிமனித வாழ்வுப் போக்கோடு நுழைந்து, தனிமனிதனின் அனுபவமாகி, உணர்வுக் கூறுகளாகி, மொழியாகி வெளிவருவன. இதில்தான் தனிமனிதன் கவிஞனாகும் செயல்நிகழ்கிறது. ஆனால் இக் கவிதைச் செயல்பாட்டில் கவிஞன் என்ற தனிமனிதனின் ஆளுமையும் வாழ்க்கைச் செயற்பாடுகளும் தவிர்க்கவியலாது பங்குபெறுவன. எனவேதான், ஒவ்வொரு கவிஞனும் ஒவ்வொரு முறையில் சமூக வாழ்வுச் சாரங்களைவெளிப்படுத்துகிறான்.

சமூகஅநீதிபற்றிய பார்வைகளிலும் இந்த வேறுபாடுகளைக் காணலாம். ஒட்டு மொத்தமான சமூகப் பொதுத்தளங்களின் பான்மையில் ஒரு பொதுத்தன்மை இருந்தாலும் கவித்துவ அமைப்பில்வேறுபட்ட தடங்களைக் காணமுடிகிறது.

இருபதாம் நூற்றாண்டில் சமூக அநீதிக்கான எதிர்ப்புக் கவிதைத் தடங்கள் பலஉள்ளன. பொருளாதாரம், சாதீயம், சமயம், வறுமை, வேலையின்மை, வன்முறை, பெண் விடுதலை, - போன்ற பல்வேறு பொருண்மைகளே இருபதாம் நூற்றாண்டுச் சமூக நீதிக் கவிதைகளில் இடம் பெற்று வருகின்றன. ஆயினும் இவற்றின் கவிதைத்தடங்கள் வேறுபட்டுள்ளன. சமூகச் சாரங்கொண்டு கவிதையாகும் மொழிக்கலையைக் கோட்பாடு சார்ந்து அணுகும் போது அதன் கவிதை அமைப்புத் தடங்கள் சார்ந்தே அதன் முழு நிகழ்வமைப்பை (Phenomena) நாம் புரிந்துகொள்ள வேண்டும். கவிதையை அறிவதும் ஆராய்வதும் சுவைப்பதும் என்ற பல்வேறு நிலைகளுக்குமே இதுவே முறையான அணுகல்.

"இத்தடங்களைக்காணுமுன் இருபதாம் நூற்றாண்டுக் கவிதைகளின் இரண்டு பெரும் பிரிவுகளைக் கணக்கிலெடுத்துக் கொள்ள வேண்டும். ஒன்று: யாப்புக்கட்டுக் கவிதைகள் இரண்டு: யாப்புக் கட்டற்ற கவிதைகள். புதுக்கவிதைகள் என்றும் இவை அழைக்கப் பெறுபவை. இவை இரண்டும் ஒரு நிலையில் தனித்தனியான

அமைப்புக்களாகவே இருப்பினும் இவற்றிற்கிடையிலான தட உறவுகள் நுட்பமாக உண்டு. மாறுதலாகவோ வளர்நிலையாகவோ இந்த உறவுகளை இனங்காண முடியும்.

யாப்புக்கட்டுக்கவிதைகளை, பழைய மரபு ஒத்திசைப்புக் (old Traditional Rhythm) கவிதைகள் என்றும் புதுக்கவிதைகளை' நவீன மரபு ஒத்திசைப் புக் (Modern or New Rhythm) கவிதைகள் என்றும் கூறலாம். மரபு என்றால் பழமை என்று பொருளல்ல; ஒரு குறிப்பிட்ட இலக்கிய முறைமையின் அடையாளம் எனலாம். ஆகவே மரபுகள் பலவற்றை அறியமுடியும். புற்றீசல்கள் போல யாப்பு இல்லாமல் எழுதப் பெற்று அச்சுருவில் வெளியாகும் அனைத்தும் கவிதைகள் என்று தகுதி பெறுவன அல்ல. புதிதோ பழையதோ - எதுவானாலும் அது 'கவிதையாக' இருப்பதே முக்கியமானது. துணுக்குகள், அரட்டைகள், சொல்ஜாலங்கள்,— ஆகியன கவிதைகளாக என்றும் ஆகமுடியா. தற்கால ஓர்மையுடன் (Modern Consciousness) கூடிய உணர்வழுத்தமும் ஆழ்மையும் ஒத்திசைப்பும் பெற்ற புதிய மொழியே புதிய கவிதை. இந்தக் கவிதை அருகே வர, சிறிது கூடத் தகுதி இல்லாத கோமாளி எழுத்துக்கள் இலக்கியத்திற்கப்பாற்பட்டவை. அவற்றின் பண்பு களை சமூகவியல் முறையில் ஆராய வேண்டும். இலக்கியமல்லாத எழுத்துக்களைத் தரம் பிரித்துப்பார்ப்பது, இலக்கிய ஆய்வாளனின் முதற்கடமையாகும். இருபதாம் நூற்றாண்டுக் கவிதைகளின் உள்ளடக்க அடிப்படைகள் பற்றி ஏற்கனவே முன்னர் எடுத்துக் காட்டப் பெற்றுள்ளது. கவிதைகள் பற்றிய ஆராய்ச்சி என்பது வெறும் உள்ளடக்கப் பிழிந்தெடுத்தல் மட்டுமன்று; உள்ளடக்கத் தின் வலிமையான அல்லது தனித்துவமான மொழி இயக்கத்தினை அடையாளம் காண்பதே ஆகும். என்னென்ன சமூகக் கருத்துக்கள் புதியகாலக் கவிதைகளில் வெளிப்பட்டுள்ளன என்பது பற்றிய குறிப்புக்கள் இதுவரையிலும் பல்வேறு நூல்களில் பலரால் எடுத்துக் காட்டப்பெற்றுள்ளன.

ஆனால், இந்த ஆய்வானது, பல்வேறு உள்ளடக்கக் கூறுகள் இயங்கும் பல்வேறு கவிதைத் தடங்களை அறிமுகப் படுத்தி விளக் குவதே ஆகும். இங்கே, மரபுக்கவிதை - புதுக்கவிதை என்ற வேற்றுமை அற்றநிலையில், கவிதை என்ற முறையில் பல்வேறு தடங்கள் ஆராயப்பெற்றுள்ளன. கீழ்க்கண்ட பிரிவுகளில் இத்தடங் கள் ஆராயப்பெற்றுள்ளன.

1. கூவலும் கற்பிதமகிழலும்
2. காட்சி ஆக்கமும் நடப்பனுபவமும்

3, எள்ளல்
4, சிதைவியல்

இனி, இந்நான்கு பிரிவுகளுக்குள் அடங்கும் கவிதைகள் பற்றிய சிறு அறிமுகங்களுக்குள் செல்லலாம். இப்பகுதிகளில், எல்லாக் கவிதைகளும் கவிஞர்களும் எடுத்துக் காட்டப் பெறவில்லை. சான்றுகளாக, சிலமட்டுமே எடுத்துக் காட்டப் பெற்றுள்ளன.

**கூவலும் கற்பித மகிழலும்**

புதிய மக்களாட்சி முறைக்கேற்ப, ஒட்டுமொத்தமாக இந்திய சமூகப் பண்பு உருமாற்றப்படவேண்டும் என்ற புதிய செயல் போக்கு, இருபதாம் நூற்றாண்டில் சமூக - அரசியல் செயல்பாடு களில் இடம் பெற்று மாற்றங்கள் நிகழத்தொடங்கின. அறிவியல் விழிப்புணர்வு, சமூகப் பார்வை, வர்க்க உணர்வு ஆகியவற்றுடன் அரசியல் பார்வை என்பது அடிப்படைச் செயலாகவும் மாறியது. மக்களாட்சி முறையிலான தேர்தல் முறை, தகவல் தொடர்பில் ஏற்பட்ட வளர்ச்சிகளில் ஒன்றான இதழ்களின் பரவலுடன் அரசியல் செயல்பாடுகளை முனைப்புப்படுத்தின. பேச்சு, எழுத்து மூலம் மக்களுடன் தொடர்புகொள்வது, கருத்துக்களை வெளி யிட்டுக் கருத்து மாற்றம் நிகழவைப்பது என்ற நடைமுறைகள் வலிமையான சமூகச் செயற்பாடுகள் ஆயின.

இந்தப் பின்னணியில் மக்களிடையே மேடை ஏறி, கூவிப்பேசி, ஒன்று திரட்டல் என்ற நோக்கு அரசியல் சூழலின் இயல்பான வெளிப்பாடாக மாறியது. பல்வேறு சமூக - அரசியல் இயக்கங்கள் செயல்படத் தொடங்கிய சூழலில் பேச்சு, எழுத்துக்களில் கூவல் பண்பும் எதிர்காலம் பற்றிய கற்பனை எதிர்பார்ப்புகளும் பெருகின. இப்பின்னணியில் கவிதைப் படைப்பாளிகளிடமும் கூவல் பண்பு இடம் பெறலாயிற்று, அத்தோடு, எதிர்கால நற்சமுதாயம் பற்றிய கொள்கைப் புனைவுகளும் உருவாயின. இவ்வாறு கொள்கைப் புனைவு செய்வதன் மூலம் வர இருப்பது பற்றிய கற்பனையான மகிழ்ச்சி ஏற்படுகிறது. கவிஞனுக்கும் மக்க ளுக்கும் இருக்கும் வேட்கைகள் பற்றிய விருப்பு நிறைவு (wish fulfilment) இத்தகைய எழுத்துக்கள் மூலம் கிடைக்கிறது. சமூகக் குறைபாடுகள் இருக்கும்வரை இந்தகைய போக்கு எக்காலத்திலும் ஏதாவது ஒரு வடிவத்தில் வெளிப்பட்டே தீரும். குறிப்பாக அரசியல் செயல்பாட்டு விழிப்புணர்வு கலந்த நிலையில் கூவல் தொனி மிகுந்தே இருக்கும். இருபதாம் நூற்றாண்டுக் கவிதைகளில்

கூவல் தொனியானது, பாரதி, பாரதிதாசன் முதல் புதுக்கவிதைகள்வரை தொடர்ந்து இடம்பெற்றுவந்துள்ளது. இவ்வெளிப்பாட்டு முறையில் கவிஞர்களிடையே சில வேறுபாடுகள் இருப்பினும் பொதுவான கூவல் தொனி இருப்பதை உணரலாம். இத்துடன் கற்பித மகிழலும் பலரிடம் வெளிப்பட்டிருப்பதைக் காணலாம். இயக்கப் பின்னணியில் உருவாகும் மனக்கூறு, கவிதையாவதில் இந்தக் கூவல்தொனி இன்றியமையாதது எனலாம்.

பொதுவாகவே, ஒரு குறிப்பிட்ட காலமாறுதலில் புதிய கவிதை மனக்கூறுகளில் மாற்றங்கள் நிகழும்போது, முதலில் ஏற்படும் கவிதை மாற்றம் அதன் மொழியில் நிகழும். கவிதைக் குரல் நேரடியானதாகவும் உடனடியான உணர்வு முனைப்பாகவும் வெளிப்படும். முன்னைய கவிதை வரலாற்றிலும் இதைக் காணலாம்.

''சுவைபுதிது பொருள்புதிது
சொல்புதிது சோதிமிக்க
நவகவிதை யெந்நாளும்
அழியாத மகாகவிதை''
(பாரதியார் கவிதைகள். பக். 199)

என்று பாரதி 1919இல் எழுதினான். பொருள் புதிது என்றால் புதிய சமூக ஓர்மை சார்ந்த பொருண்மை என்றே பொருள்படும். எனவே, இதற்கேற்ப எளிய, கூரிய, நேரடியான, கூவல்பண்புகள் கொண்ட புதிய சொல் உருவாகிறது. இதன் அனுபவமே புதிய சுவை. பாரதியிடம் தொடங்கிய இப்புதியசுவை பல்வேறு உட்கூறுகளுடன் தொடர்ந்து வந்து கொண்டிருக்கிறது. இந்தப் புதிய சொல்லின் பண்புகளில் ஒன்றே 'கூவல்'. சி சுப்பிரமணியபாரதி, பாரதிதாசன், ஜீவா, இன்குலாப், தணிகைச்செல்வன், பரிணாமன் மற்றும் 'வானம்பாடி' இயக்கக் கவிஞர்களிடம் கூவல் பண்பு மிகுதி எனலாம். கூவல் பண்புடன் மட்டுந்தான் இவர்கள் எழுதியுள்ளனர் என்பதல்ல இதன் பொருள். சமூக நீதி பற்றிய இவர்களின் கவிதைக் குரல்களில் இது ஒரு சிறப்புப் பகுதி என்பதே பொருள்.

பாரதியாரிடமிருந்து சில சான்றுகளைக் காணலாம்.

''தனிஒருவனுக்கு உணவில்லை எனில் - இச்
சகத்தினை அழித்திடுவோம்' (பாரதி பா. பக். 28)

''இதுபொறுப்பதில்லை - தம்பி
எரிதழல் கொண்டுவா தம்பி
கதிரை வைத்திழந்தான் - அண்ணன்
கையை எரித்திடுவோம்.'' (பாரதி பா, பக். 350)

''முப்பதுகோடி ஜனங்களின் சங்கம்
முழுமைக்கும் பொது உடைமை
ஒப்பிலாத சமுதாயம்
உலகத்துக்கொரு புதுமை - வாழ்க
மனிதர்உணவை மனிதர் பறிக்கும்
வழக்கம் இனியுண்டோ?
மனிதர்நோக மனிதர் பார்க்கும்
வாழ்க்கை இனிஉண்டோ?'' (பாரதி பா. பக். 1)

''வேதபுரத்திலே வியாபாரம் பெருகுது
தொழில்பெருகுது தொழிலாளி வாழ்வான்.''
(பாரதி பா. பக். 179)

பாரதி, உள்முகப்பார்வை (Introspection) கொண்ட கவிதைகளையும் நிறைய எழுதியுள்ளான். அவற்றின் போக்கு ஒருவகையான தன்னிரக்கத் தன்மையுடன் இருக்கும். சமூகநீதிக் கவிதைகளிலோ வெடிப்புத் தன்மை கொண்ட கூவல் பண்பினை மேற்கண்ட பாடல்களில் காணலாம். சமதர்மம், சுதந்திர உணர்வு, தொழிலாளி பெருமை ஆகியன பற்றிப் பாடுவது என்பதுதான் சமூகநீதிக்கவிதை மரபின் உள்ளடக்க முனைப்பு எனலாம். பெண்ணடிமைத்தனத்திற்கெதிரான குரலில் இக்கூவலைக் காணலாம்.

''பெண்மைவாழ்கென்று கூத்திடுவோமடா
பெண்மைவெல் கென்று கூத்திடுவோமடா''
(பாரதி பா. பக். 174)

''கற்புநிலை என்று சொல்லவந்தார் - இரு
கட்சிக்கும் அஃது பொதுவில் வைப்போம்''
(பாரதி பா. பக். 175)

தொழிலாளர் பற்றிய கவிதைகளில் இக்கூவல் தொனி, மிக ஆற்றலுடன் நேரடிச் சக்தியாக வெளிப்படுவதைக் காணலாம்.

''இரும்பைக் காய்ச்சி உருக்கிடு வீரே
எந்திரங்கள் வகுத்திடு வீரே
கரும்பைச்சாறு பிழிந்திடு வீரே
கடலில் மூழ்கிநல் முத்தெடுப்பீரே...''
(பாரதி பா. பக். 176)

மக்களிடையே உடலுழைப்பில் ஈடுபட்டு உற்பத்தியினைச் செய்யும் தொழிலாளர்களை உயர்வுபடுத்தும் இப்பாடல்களே சமூகநீதிக்கான கூட்டுக் குரல் எனலாம். பாரதியின் சமூகநீதி உணர்வை ஒட்டுமொத்தமாய்க் கூவலாகக் கூறும் ஒரு பாடல்'விடுதலை' என்ற பாடலாகும். சாதீயம், பொருளாதார ஏற்றத்தாழ்வு, பெண்ணடிமை - ஆகியவற்றுக்கெதிரான, இசைமை கொண்ட கூவல் பாடல் இது.

''பறையருக்கும் இங்கு தீயர்
புலையருக்கும் விடுதலை
..........................................
..........................................
ஏழை என்றும் அடிமை என்றும்
எவனும் இல்லை ஜாதியில்
..........................................
..........................................
மாதர் தம்மை இழிவு செய்யும்
மடமையைக் கொளுத்துவோம்''
(பாரதி பா. பக். 41)

மற்றும் 'சுதந்திரப்பள்ளு' போன்ற பாடல்களிலும் இப்போக்கினைக் காணலாம். புதிய சமூகநீதிக்கான குரல் கொடுத்த பாரதியின் கவிதையில் காணப்படும் இன்னொரு பண்பையும் இங்கே எண்ணிப்பார்க்கலாம். அது உள்ளடங்கிய-ஆனால்-சினம்தெறிக்கும் கூவல் ஆகும்.

.'முன்னாளில் ஐயரெலாம் வேதம் - ஓத
மூன்று மழை பெய்யுமடா மாதம்
இந்நாளிலே பொய்மைப் பார்ப்பார் - இவர்
ஏது செய்தாலும் காசு பெறப் பார்ப்பார்
..........................................
பேராசைக் காரனடா பார்ப்பான் - ஆனால்
பெரியதுரை என்னில் உடல் வேர்ப்பான்''
.................................. (பாரதி பா. பக். 177)

பழைய பார்ப்பனீயச் சாதி முதன்மை இன்று முதலாளியப் பணமுதன்மைக்கு அடிபணியும் கால மாறுதலைக் காட்டி இச்சூழலின் புதிய சமூகப் போக்கைக் காட்டுகிறான் பாரதி. கூவலுடன் புதிய சமூகநீதிக்கான குரல் கொடுத்துள்ள பாரதி, ஆங்கிலேயர் வருகையால் நிகழ்ந்த சில நல்ல காரியங்களை, பழைய அநீதியின்

அழிவினை 29-1-1906இல் வேல்ஸ் இளவரசருக்குப் பாரதமாதா நல்வாழ்த்துக் கூறுவதாக எழுதி அமைத்த கவிதையில் மென்மையாக வெளிப்படுத்துகிறான். கூவல் பண்பு இல்லாத இக்கவிதை ஓரளவு பழைய மொழி நடையில் அமைந்துள்ளது குறிப்பிடத் தக்கது.

''பாரததேவி பழைமை போற்றிருவருள்
பொழிதரலுற்றனள். பொருள் செயற்குரிய
தொழிற்கணம் பலப்பல தோன்றின. பின்னும்
கொடுமதப் பாவிகள் குறும்பெலா மகன்றன
யாற்றினிற் பெண்களை யெறிவதூஉம் இரதத்
துருளையிற் பாலரை உயிருடன் மாய்த்தலும்
பெண்டிரைக் கணவர்தம் பிணத்துடன் எரித்தலும்
எனப்பல தீமைகள் இறந்துபட்டனவால்...
(பாரதி பா. ப. 202—203)

நேரடியான, கூவல் தொனிக் கவிதைகள் யாவும் எளிமையான சொல்கட்டு பெற்றிருப்பதைக் காணலாம். ஆயினும், பழங்கவிதைகள் போலப் பழஞ்சொல்கட்டுடன் கவிதை எழுதும் முறையையும் பாரதி 1909 முதல் கடைசிக்காலம் வரை தொடர்ந்து பின்பற்றி வந்துள்ளான். புதிய எளிய சொல்கட்டு, பழஞ் சொல்கட்டுடன் மாறிமாறி பாரதி எழுதியிருப்பது வியப்பானது. சமூகநீதிக்கான, புறவய மாறுதல்களை விழையும் பாரதியிடம் ''எல்லோரும் அமர நிலை எய்தும்'' ஆன்மிக - அகவய மாறுதல் பற்றிய உணர்வும் ஆழமாக இருத்தலால், பழைய கவிதை நடை மூலம் ஆன்மிக மரபுடன் தன்னை அடையாளம் காட்டிக்கொள்வதில் தற்கவனத்துடன் செயல்பட்டுள்ளான் எனலாம்.

பாரதிதாசனிடம் அமரநிலை எய்துதற்கான ஆன்ம நவிற்சி கிடையாது. ஆயினும், ஒரு நல்ல பக்தியாளனாகவே கவிதை எழுதத் தொடங்கியவன்தான் பாரதிதாசனும், நாளடைவில் தன் சமயப் பார்வையை உள்ளமுக்கிவிட்டு, சமூக வாழ்வில் காணப்படும் அநீதிகளுக்கெதிரான குரல் கொடுப்பதிலே முனைப்பாக ஈடுபட்டான். மானிடன் பெருமை கூறல், மூடப்பழக்க எதிர்ப்பு, பொதுவுடைமை, சுயமரியாதை, பெண்ணுரிமை-போன்ற சமூகநீதி உள்ளடக்கங்களே பாரதிதாசனின் கூவல் கவிதைகளிலும் காணப்படுகின்றன. சில சான்றுகள் :

''மானிடன் வாழ்ந்த வரைக்கும் - இந்த
வையத்திலே அவன் செய்த வரைக்கும்

மானிடத்தன்மைக்கு வேறாய் - ஒரு
வல்லமை கேட்டிருந்தால் அதைக் கூறாய்
மானிட மென்பதுபுல்லோ? - அன்றி
மரக்கட்டையைக் குறித்திடவந்த சொல்லோ?
கானிடை வாழ்ந்ததும் உண்டு - பின்பு
கடலை வசப்படச் செய்ததும் அதுதான்'' (மானிடசக்தி)

''இன்பம் செறிந்திருக்கும் இப்பெரிய தேசத்தில்
முப்பத்து முக்கோடி மாந்தர்கள் மொய்த்தென்ன?
செப்பும் இயற்கை வளங்கள் செறிந்தென்ன?
மூடப்பழக்கம், முடிவற்ற கண்ணுறக்கம்
ஓடுவதென்றோ?'' (சஞ்சீவி பர்வதத்தின் சாரல்)

''புதியதோர் உலகம் செய்வோம் - கெட்ட
போரிடும் உலகத்தை வேரொடு சாய்ப்போம்
பொதுஉடைமைக் கொள்கை திசை எட்டும்
சேர்ப்போம்'' (புதிய உலகு செய்வோம்)

பாரதிதாசன் கூவல் குரல் சமயத்தலைவரைநோக்கிப் பேசுவதாக அமைந்திருக்கும் ஒரு கவிதையில் உள்ளாற்றலுடன் வெளிப்பட்டுள்ளதைக் காணலாம். நிலப்பிரபுத்துவ அநீதிக்கெதிரான குரல் இது.

''மதத்தின் தலைவீர் - இந்த
மண்ணணவளைத்துள்ள அண்ணாத்தைமாரே,
குதர்க்கம் விளைத்தே - பெருங்
கொள்ளை அடித்திட்ட கோடீசுரர்காள்
வதக்கிப்பிழிந்தே - சொத்தை
வடிகட்டி எமைத்துடிக்க விட்டீரே
நிதியின் பெருக்கம் - விளை
நிலமுற்றும் உங்கள்வசம் பண்ணிவிட்டீர்!...
..............................
..............................
இப்பொழுதே நீர் - பொது
இன்பம் விளைந்திட உங்கள் சொத்தை
ஒப்படைப்பீரே - எங்கள்
உடலில் இரத்தம் கொதிக்கு முன்னே!''
(தொழிலாளர் விண்ணப்பம்)

''சுயமரியாதைகொள் தோழா - நீ
துயர் கெடுப்பாய் வாழ்வில் உயர்வடைவாயே

உயர்வென்று பார்ப்பனன் சொன்னால் - நீ
உலகினில் மக்கள் எலாம் சமம் என்பாய்''
(வாழ்வில் உயர்வு கொள்)

சுயமரியாதை பற்றிய இப்பாடல் மூலம், பார்ப்பனீய எதிர்ப்பு என்பது ஒரு குறிப்பிட்ட சாதியினர்க்கெதிரானது அல்ல என்பதையும், சமூக சமத்துவம் சார்ந்த கொள்கைக்கான குரல் என்பதையும் அறிந்துகொள்ளலாம். பெண்ணுரிமைக்கானகுரலும் இத்தகையதே.

''பெண்ணுக்குப் பேச்சுரிமை வேண்டாம் என்றீரா?
மண்ணுக்குக் கேடாய் மதித்தீரா பெண்ணினத்தை''
(சஞ்சீவிபர்வதத்தின் சாரல்)

பாரதிதாசன் கவிதைகளில் சமூகநீதிக்கான குரல்கள், கூவலாக மட்டுமன்றி வேறுநிலைகளிலும் வெளிப்பட்டுள்ளன. ''பாண்டியன் பரிசு'' - கதைக் கவிதையில் திருடர்களைச் சமூகநீதிக்கான குரல் காரர்களாகப் பாரதிதாசன் படைத்துள்ளார். கூவல் ஊடோடு கின்ற கொள்கைப்புனைவாகவும் படைத்துள்ளார்.

ஆனால் ஒட்டுமொத்தமாக, பாண்டியன் பரிசு ஓர் கொள்கைப் புனைவாக அமைந்திருப்பதால் அதன் ஒட்டுமொத்த விளைவு கற்பித மகிழலாக (wishful - Fantasy) அமைந்துவிடுகிறது.

''இருட்டறையில் உள்ளதடா உலகம் - சாதி
இருக்கின்ற தென்பானும் இருக்கின்றானே''
(பாண்டியன் : 56 : 3)

''பொருளாளி திருடர்களை விளைவிக்கின்றான்
பொதுவுடைமையோன் திருட்டைக்களைவிக்கின்றான்''
(மேலது 17 : 2)

''வேண்டுமென்றே,
பொன்னையோ காசினையோ நாமெடுத்துப்
போம்படி செய்கின்றார்கள். அதன்பின் நம்மை
வன்சிறையில் அடைப்பார்கள். திருடரென்று
மக்களிடம் சொல்வார்கள், இவை ஏன் என்றால்
மன்னர் பழம் புலவர் வணிகர்கட் கெல்லாம்
வரும்பெயரை நமக்காக்கும் முயற்சி'' (மேலது 17 : 3)

இவ்வாறெல்லாம் நேருக்குநேர் முகத்திலடித்தாற்போல் சமூக அநீதி பற்றிய உண்மைகளைக் கூறினாலும், கவிதைக் கதை அமைப்பானது, எல்லாம் நல்லபடியாய் முடியக்கூடிய, மனதிற்கு ஒரு வேட்கை நிறைவ(wishful filment) ஏற்படுத்தக் கூடிய புனைவுப்

படைப்பாக அமைந்துவிடுகிறது. சமூகத்தில் அழுத்திவைக்கப்பட்ட மக்கள், சமயம், சாதி இவற்றிற்கப்பாற்பட்ட பகுத்தறிவு மக்கள் யாவரும் ஒன்றுசேர்ந்து போர் நடத்தி, தந்திரக்கார ஆதிக்கவாதி களை ஒழித்து, நல்லரசு அமைப்பதாகப் 'பாண்டியன் பரிசு' கதை முடிகிறது. இவ்வாறு நல் முடிவில் பல கதைக் கவிதைகளைப் பாரதிதாசன் எழுதியுள்ளார். யாவிலும் கற்பிதமகிழல் என்ற உள்நிலை உருவாக்கமே நிகழ்கிறது என்பதில் ஐயமில்லை. புகழ் பெற்ற, 'புரட்சிக்கவி'யிலும் இத்தகைய முடிவே அமைந்துள்ளது. புரட்சிக் கவியின் இறுதிப்பகுதி :

''இதுகேட்ட தேசமக்கள்
கொடிதென்றார்! கொடுவாளைப்பறித்தார் - அந்தக்
கொலையாளர் உயிர் தப்பி ஓடலானார்
கவிஞனுக்கும் காதலிக்கும் மீட்சி தந்தார்
காவலன்பால் தூதொன்று போகச் சொன்னார்
புவி ஆட்சி இனி உனக்குத் தாரோம் என்று
போயுரைப்பாய் என்றார்கள்! போகு முன்பே
செவியினிலே ஏறிற்று போனான் வேந்தன்
செல்வமெல்லாம் உரிமை யெல்லாம் நாட்டாருக்கே
நவையின்றி யெய்துதற்குச் சட்டம் செய்தார்
நலிவில்லை! நலமெல்லாம் வாய்ந்த தங்கே!''

இங்கே, காரல்மார்க்ஸ் கனவுகண்ட பொதுமைச் சமுதாயம், கவிதைக்குள், ஒரு நொடியில் உருவாகி அமைக்கப்பட்டு விடு வதைக் காண்கிறோம். வாசகரிடையே ஏற்படுத்தும் வேட்கை நிறைவே இங்கே குறிப்பிடத்தக்கது. இது, பல நிலைகளிலும் பாரதிதாசனிடம் வெளிப்பட்டுள்ளது. 'மாண்டவன் மீண்டான்' என்ற கவிதையில்,

''மதிவந்து விட்ட தண்ணே நமது சர்க்காருக்கு
மக்களுக்குப் புவிப் பொருள்கள் பொது வென்று சர்க்கார்
பதிந்துவிட்டார். இனிப் பெண்டு பிள்ளைகளைப் பற்றிப்
பயமில்லை. கவலையில்லை. மெய்யண்ணே மெய்மெய்

எனக் கூறுகிறார்,

'கடல் மேற்குமிழிகள்' - இறுதிப்பகுதியில்,

''ஒரு கடவுள் உண்டென்போம் உருவணக்கம் ஒழிப்போம்
உள்ளபல சண்டை யெலாம் ஒழியும் மதம் ஒழிந்தால்

திருக்கோவில் தொழிற்சாலை! பார்ப்பானும் கையில்
செங்கோலேந்தும் பிறரும் மக்களைச் சார்ந்தாரே''

என்கிறார். 'ஆறு' பற்றிய வருணனைக் கவிதையில் கூடக் கற்பித மகிழல் பண்பு வெளிப்பட்டுள்ளது.

''நோய் தீர்ந்தார் வறுமை தீர்ந்தார்
நூற்றுக்கு நூறு பேரும்'' (அழகின் சிரிப்பு)

பாரதிதாசனின் இத்தகைய சமூகக் கவிதைப் பண்புகள், பாரதிதாசன் வழி மரபுக்கவிஞர்கள் அனைவரிடமும் அமைந்திருப்பதைக் காணமுடியும். மனத்துள் கிடக்கும் வேட்கைகளே இத்தகைய கனவுருபெறுகின்றன.

பாரதியிடம் ஆன்மீக உணர்வு பழஞ்சொல்கட்டாக வெளிப்பட்டுள்ளது; பாரதிதாசனிடமோ, சைவ உணர்வாக வெளிப்பட்டுள்ளது.

''தமிழொளியை மதங்களிலே சாய்க்காமை வேண்டும்''
(தமிழ் வளர்ச்சி)

என்று கூறும் பாரதிதாசன்,

''சைவ நெறி ஒன்றே வடக்குச் சனங்கட்கோர்
உய்வளிப்பதாகும் உணர்ந்திடுவீர் (எதிர்பாராத முத்தம்)

என்கின்றார்.

''மண்ணுலகம் மறைந்தொழியும் காலமட்டும்
பின்னும் மலை தூக்கும் மனிதன் பிறப்பதில்லை''
(சஞ்சீவிபர்வதத்தின் சாரல்)

எனக்கூறும் பாரதிதாசனே,

''குன்றெடுக்கும் பெருந்தோளான் கொடை கொடுக்கும்
கையான்'' (வீரத்தமிழன்)

என இராவணனைப் புகழ்ந்து புராணத்தை ஒத்துக்கொள்ளும் நிலையைக் காண்கிறோம்.

இவ்வாறு பாரதி, பாரதிதாசன் ஆகிய இருவரிடமும், பழைய சமய உணர்வு பற்றிய ஆழமான, உள்மனப் பிடிப்பானது, சமூக நீதிக்குக் குரல் கொடுக்க வேண்டும் என்ற தற்கவனத்தையும் மீறி, நனவிலி நிலையில் (unconsciously) வெளிப்பட்டுள்ளது எனலாம்.

பொதுவுடைமை இயக்கத் தலைவர்களில் ஒருவரான ஜீவா கவிதைகளிலும் கூவல் பண்பு இடம் பெற்றுள்ளதை அறிகிறோம்,

ஆயினும், கூவலூடே அறிவியல் சார்ந்த சமதர்மக் கருத்துக்கூறும் இழையோடுவதை உணர்ந்து கொள்ளலாம்.

''பொதுஉடைமை பெறவேண்டும்—உடன்
புரட்சி செய்திட வேண்டும்
வேறென்ன வேண்டும்''
(ஜீவாவின் பாடல்கள். பக். 26)

''சுத்த சமதர்மம் ஓங்க வேண்டும்
தொழிலாளர் துன்பங்கள் நீங்க வேண்டும்
எத்தும் புரோகிதம் சாகவேண்டும்
இன்ப விஞ்ஞானம் உண்டாக வேண்டும்''.
(மேலது, பக். 38)

இயக்கச்சார்பு, சமூக அநீதி எதிர்ப்பு - ஆகிய நிலைகள் இணையும் போது கூவல் தொனி என்பது இயல்பான வெளிப்பாடு எனலாம். எல்லாரையும் உள்ளடக்கி விளித்தல் என்பது ஒரு கூட்டுணர்வாக வெளிப்படுவதால் கூவல் பண்பு அவ்வெளிப்பாட்டின் வடிவமாகி விடுகிறது.

இக்கூவல் பண்பு, புதுக்கவிதைகள் தோன்றியபின் சமூக நீதிக்கான குரல் இயக்கமாக ஒலிக்கத் தொடங்கிய போது, வேறு பரிமாணங்களும் பெறலாயிற்று. ந. பிச்சமூர்த்தி, க.நா.சுப்பிரமணியம் போன்றவர்களில் உள்ளடங்கிய அமைதிக்குரலாக அறிமுகமாகிய புதுக்கவிதை 'வானம்பாடி' இதழ் இயக்கப் பின்னணியில், கூவல் பண்பு மிகுந்ததாக வெளிப்படத் தொடங்கியது. இவ்விதழியக்கப் பின்னணியில் எழுதியவர்களில் பெரும்பான்மையோர் திராவிட இயக்கப்பின்னணியில் உருவாகி, பொதுவுடைமைஇயக்கம் நோக்கிய பார்வைக்கு மாறியவர்கள். திராவிட இயக்கத்தில் உருவாகி இருந்த மேடைப் பேச்சும், வசனகவிதைப் போக்கும் புதுக்கவிதைத் தடங்களில் கலந்து கொண்டன. திராவிட இயக்கத்தின் தலைவரான அறிஞர் அண்ணா 1937 முதலே வசன கவிதைகள் எழுத முயன்றுள்ளார். ஒரு சிறந்த கவிஞராக அண்ணா வெளிப்படா விட்டாலும், பழைய யாப்புமரபு முறையை மீறும் இயல்பான கருத்து மாற்றத்திற்கு ஆளாகியிருப்பது புதிய பண்பாட்டுப் பார்வையின் வெளிப்பாடு எனலாம். 1951இல் எழுதிய 'ஒரே நிலவு' என்ற கவிதை வரிசையில், கவிஞன் பற்றி 'வால்ட் விட்மன்' எழுதியதாகக் கீழ்க் கண்டவாறு தமிழில் தந்துள்ளார்:

''கவிஞன் ஓர் காலக்கண்ணாடி
பழைமைச் சாயலின் பிரதிபலிப்பல்ல

உள்ளத்தில் ஆவேசம் உணர்ச்சியில் 'புயல்'
எழுப்பிடும் அவனது கீதம்
எதுகை மோனை எழில்தரும் உவமை
வசீகர வர்ணனை - பழைமைக்கு மெருகு
இத்தனையும் தேடி, எங்கெங்கோ ஓடி
'வார்த்தை முடையும்' வலைஞன் அல்ல''
(அண்ணா கவிதைகள், ஒரே நிலவு)

விட்மனின் எழுத்துக்களில் பற்று மிகுந்த அண்ணாவின் கூவல் மென்மையாக வெளிப்பட்டுள்ளது. 1942இல் எழுதிய கவிதை ஒன்று:

''பாறிற் படுத்துறங்கும் பராரியை எழுப்பி
பணக் கோட்டைகளைப் பிடித்துக் குலுக்கு
அடிமைக் குருதி கொதித்திடும் நம்பிக்கையூட்டி
சிட்டுவல்லூறை எதிர்த்திடும் வகைசெய்
......
உழவன் வாழ்ந்திட வழிதரா வயலின்
செந்நெல்லை மிதித்து மண்ணாகச் செய்திடு''
(சீறிடும் சிட்டு)

1946இல் எழுதிய ஒரு கவிதை:

''வெள்ளைக்காரக் கூட்டமெல்லாம் வெளியேறிப் போகணும்
சள்ளைபிடிச்ச ஒரு வாழ்வு போயி ஒரு சவுகரியம் பிறக்கணும்
கொள்ளையிடும் கும்பலது கூண்டோடு தொலையணும்
பள்ளுபறை என்ற பேச்சைப் பழசாக்கிப் போடணும்
(சின்னான் சிந்து)

பேச்சு மொழியின் அழுத்தமும் மேடையின் அலங்கார மொழிக் கூறுகளும் திராவிட முன்னேற்றக் கழகத் தலைவர்களின் அரசியல் தமிழாக நாடெங்கும் அறிமுகமான பின்னணியில், அந்த அரசியல் சார்பு கொண்டிருந்த பல்வேறு படித்தமக்களிடையே அத்தகைய மொழிக்கூறுகள் ஆழ்ந்த அழுத்தம் பெற்றிருந்தன. இந்த மொழி ஆற்றலுக்குச் சில சான்றுகள் :

''புண்பட்ட என்னகத்தில் புலமைத்தாயே உந்தன்கேலி
பண்பட்ட தமிழ் மருந்தாய்ப் பாய்வதை நான்
உணருகின்றேன்
கண்கெட்ட பின்பும் என் கரம் தொட்டு வணங்கிச்சென்ற
காளையை நான் மறக்கவில்லை''
(கலைஞர் கருணாநிதி கவிதைகள். ப.3)

வானம்பாடி கவிதை மரபிற்கு முன்னோடி போன்ற சிலவரிகள் :

"நீர் வீழ்ச்சி போலன்றோ நிமிர்ந்த கவிபாரதிக்குப்
பாவோச்சிப் பொழிந்து விட்டார் நன்று.
ஒரு
நீர்வீழ்ச்சிச் சேட்டையினால்
பேரதிர்ச்சிப் பெரும்புயலைத் தமிழ்நாடு
தாங்கிற்றந்தோ" (மேலது)

பிச்சமூர்த்தி. க.நா.சு - போன்றோர் மூலம் ஒலித்த புதுக்குரல்களி லிருந்து வேறுபட்ட புதிய கவித்துவ மொழிப்போக்கினை இங்கே அறிய முடிகிறது.

கூவலின் கனவுரு

இத்தகைய மொழிக் கூறுகளில் அனுபவம் பெற்றிருந்தவர்கள், பின்னர் அந்த அரசியலில் நம்பிக்கை இழந்த பின்னணியில் 'வானம் பாடி' இயக்கமாக இணைந்தபோது, கூவலின் கூறு, புதிய அலங் காரப் பண்பு பெறலாயிற்று ('வானம்பாடி' இயக்கத்தில் திராவிட இயக்கப் பின்னணியினர் மட்டுமன்றி வேறுபலரும் உண்டு). கற்பித மகிழல் என்பது, கனவுருவாகவும் உடனடிக் கிளர்ச்சியையும் மன நிறைவையும் ஏற்படுத்தக்கூடிய உயர்வு நவிற்சிகளுடன் வெளிப் படலாயிற்று. சொற்சேர்க்கைகளில் ஓர் அற்புதமாயத்தன்மை உரு வாக்கப்பெற்றது. ஆயினும், இப்போக்கின் அடிப்படை உள்ளடக் கங்கள் வர்க்க வேறுபாடற்ற சமதர்மச் சமூகநீதி சார்ந்தனவே யாகும். கனவு நிலையில் சமூக நீதியைப் பார்ப்பதும், ஏழை மற்றும் உழைக்கும் மக்களைக் காண்பதுமான ஒரு புதிய கூட்டு மொழியி லான கவிதைத்தடம் உருவாகி விடுகிறது. சிலசான்றுகள்:

தொழிலாளி:

"நித்தம்புது மோகனங்கள்
நிர்மிக்கும் பிரம்மாக்கள்"

(சிற்பி வெளிச்சங்கள், பக். viii)

உழைப்பாளி ஆற்றல்

"புயல் - என் விசிறி
பூமியை
நடு நடுங்க வைக்கும்
பூகம்பம் எனக்கு
ஊஞ்சல் விளையாட்டு
இடியோசை

என்னைத்துயில் நீங்க வைக்கும்
திருப்பள்ளி எழுச்சியின்
இன்னிசை''
(மேத்தா, கண்ணீர்ப் பூக்கள்; சுயதரிசனம்)

புதிய சமத்துவ சமூகம் பற்றிய எதிர்பார்ப்புக் கனவுகளின் மாய உருவாகக் கவிதை இயங்குவதைக் காணலாம்.

சான்றுகள் :

''உதயக் கோயில்களுக்கு
எம் கரங்கள் தாம்
அமைக்கின்றன கோபுரக்கலசங்கள்''
(சிற்பி, வெளிச்சங்கள் பக். ix)

''எங்களுக்கு மேலே
அகண்டகாரமாய் விரிகின்றது
சோசலிச வானம்
அதன்
மணி நீல வீதிகளில் - எம்
ஜோதிச்சிறகுகள் விரிகின்றன'' (மேலது)

''மண்ணைக் குருதி நீராட்டு
பின்னர்
மானுடத்தை வசந்தத்தில் தாலாட்டு''
(பா. செயப் பிரகாசம்; வெளிச்சங்கள்; பக். 31)

''வானம்பாடியே
சிறகை விரி பற
உனது பாடலால்
உயர்ந்த வானத்துக்
கிளர்ச்சி கொள்ளட்டும்
பாலைவனத்தின்
நரம்பு மண்டலத்தில்
நீலநதி ரத்தம்
திசைமாறிப் பாயட்டும்
பூமியின் செவிகள்
புல்லரிக்கட்டும்
வானம்பாடியே
சிறகை விரி பற ...''
(இன்குலாப், வெளிச்சங்கள் பக். 85)

''மானுடவர் பிரார்த்தனையில்
வேதம் ஓதும்
வர்க்க வெறிச் சைத்தான்கள்
முதலாளித்துவப் புலியை
மூடிவைத்த கூண்டுகளாய்
முளைத்தவர்கள்''
(நா. காமராசன்; கறுப்பு மலர்கள்; ப. 73)

''ஏழைகளின் அடுப்பெரிப்போம்
இல்லை எனில் சூரியனில்
தீக்குளிப்போம்'' (மேலது. பக். 75)

''எங்கெல்லாம் வர்க்க வெறிப் புயலிடையோர்
இளம்படகு தவழ்கிறதோ அங்கெல்லாம்
என்னுடைய துடுப்புகளில் நான் துடிப்பேன்''
(மேலது பக். 81)

மேற்கண்ட கவிதைகளில். உருவகப் படிமவியல், மேடைப் பேச்சு இயல்பு, உரைநடைத்தன்மை, ஆகியன இணைந்த கூவல் தொனியுடன், கனவுரு கொண்ட மாயஉணர்வும் இழையோடுவதைக் காணலாம். மிகையான அழுத்தங்களும் இடம் பெறுவதைக் காணலாம். அறிவு நிறை பேச்சுகளும் நிரம்பி இருக்கும்.

இத்தகைய கவிதை மொழியானது, கனவுகளுடனும் நிறைவேறா ஆசைகளுடனும் போராடி வாழும் சாதாரண, நடுத்தர மக்களுக்கு ஓர் ஆவேசமான கருவியாகவும், உணர்வுக் கொள்கலமாகவும் மிக எளிதில் அமைந்துவிடும். இந்த நிலையில், சமூக நீதி பற்றிய உடனடியான ஆவேச உணர்ச்சி, இறுக்கக் குறைப்பிற்கும், மனவடிகாலுக்கும் பிரிந்தோடி விடுகிறது எனலாம். இதுவும் ஒரு வகையான விருப்ப நிறைவுச் (wishfulfilment) செயலே. இந்நிலைக்கேற்ப கற்பிதப் (fantasy) புனைவுக் கூறுகளாகவே கவிதைகள் அமைந்து விடுகின்றன. இன்றைய நுகர்ச்சிச் சமூகத்தில் (consumerist), இத்தகைய கவிதைகள் மிகுந்த கவனத்தைப்பெறும் ஏனெனில் இவை, கனவுகளாக மனத்திற்கு நிறைவு தருவன.

### கூவலின் புரட்சிக்குரல்

கூவல் தொனி என்பது, புதிய யாப்புக் கட்டற்ற நிலையில் சமூக மாற்றத்துக்கான புரட்சி உணர்வுடன் இணைந்து வெளிப்படும்போது கற்பிதங்களிலிருந்தும் கனவுருக்களிலிருந்தும் சற்று வேறான, அறிவியக்கக் கூறாக அமைந்துவிடும் நிலையையும்

காண்கிறோம். மார்க்சிய அடிப்படையில் ஒட்டு மொத்தமாகச் சமூக அமைப்பை மாற்றுவதே சமூகநீதியை உருவாக்கும் செயல் என்ற பேருணர்வில், பழைய சமய—சாதீயக் கூறுகளையும் புதிய ஆதிக்க ஆணவக் கூறுகளையும் எதிர்க்கும் சக்தியே கூவலுடன் கூடிய புரட்சிக் குரலாக வெளிப்படுகிறது. இன்குலாப்பின் 'யுகப் பிரளயம்' என்ற கவிதை,

''காலங்களின் நெடுவாசற்
கதவுகள் திறக்க
நாகரிகக் கொடிபிடித்து
நடக்கின்றார் மானுடர்கள்'

(இன்குலாப் கவிதைகள், ப. 25)

என்று மென்மையாகத் தொடங்கி,

''காலனி அரும்புகளால்
கட்டிய மாலைகளில்
குபேரபுரி எஜமானர்
கழுத்து மறைகிறது''

(மேலது பக். 28)

என்று கால மாறுதல்களை விளக்கி, இந்த நூற்றாண்டின் 'புரட்சிக் குரலின்' தேவையை இவ்வாறு விளக்குகிறது

''இந்த நூற்றாண்டின்
இளங்காலை ஆண்டுகளில்
புரட்சியின் கதிர் ஒன்று
பூமியின் இமைக்கதவை
வருடியது! உழைக்கும்
வர்க்கத்தை வாழ்த்தியது
தூக்கச் சூனியத்தில்
சுகங்கண்ட தேசங்கள்
சூரியனின் ஒளிப்பரப்பில்
கனவுகளை எறிந்தார்கள்''

(மேலது பக். 28)

''கனவுகளை எறிந்துவிடுதல்'' என்பதே அறிவியக்க நடைமுறைக்கு இட்டுச் செல்வது. இந்தக் கவிதைப் பகுதிகளில் பழைய யாப்புக் கட்டின் இசைமை இழையோடுவதை உணரலாம். ஆனால், இவ்வாறு தொடங்கும் 'யுகப்பிரளயம்' கவிதையின், அடுத்த பேச்சின் கூவல்தொனி புரட்சிக்கான கூவலாக எரி சிந்தத் தொடங்குகிறது. அங்கே, யாப்புக் கட்டு இசைமை மறைகிறது.

''மகாத்மாக்களே!
உங்கள் மயான மஞ்சங்களின் விளிம்பில்
நாங்கள்
சிந்துவதையும்
பன்னீர்த் துளிகள் என்று
பரவசப் படாதீர்கள்......
.........
உங்கள்
மாயாவாத மோக வலைகளில்
எங்கள்
சிறகுகள் விடுதலைக்காகத் துடிக்கின்றன.
(மேலது பக். 25-29)

இவ்வாறாக அலையாகச் செல்லும் கவிதை இறுதியில்,

எந்த
சுரண்டல் சாம்ராஜ்யங்களின்
தர்பார் மண்டபங்களில்
நீங்கள்
புரோகிதம் புரிந்தீர்களோ
அந்தச்
சாம்ராஜ்யங்கள்
பரிவாரங்கள்
வேதங்கள்
பஜனைகள்
எல்லாம்
இந்த யுகப்பிரளயத்தின்
கந்தக அலைகளால்
சாம்பலாகின்றன
நாங்கள் எழுகிறோம்
நாங்கள் எழுகிறோம் (மேலது பக்.32)

யாப்புக்கட்டு இசைசமையுடன் தொடங்கிய கவிதை பேச்சுத் தொனியாகமாறிப்போவதை—இந்த வடிவமாற்றத்தைப் புரட்சிகர உள்ளடக்கம் செய்வதை அறியமுடிகிறது. எனவே, வடிவம் என்பது சமூகச் சாரத்தோடு அமைவதை இங்கே காண்கிறோம். இங்கும் உருவகப் படிமவியல் கவிதையின் உள்ளமைப்பாகச் செயல் படுவதைக் காணலாம். வானம்பாடி இயக்கத்தின் பண்பு இது. இப்புரட்சிகரச் சிந்தனைக் கூவல் குரல், உருவகப்பாங்கு தூக்கலாக

இல்லாமல் சொல்லாற்றலாகத் தணிகைச் செல்வனிடம் வெளிப் படுகிறது. காலங்காலமான சமூக அநீதியின் வடிவமான வர்க்க வேற்றுமையைக் கூறும் கவிதை வரிகள் :

''கரிகாலனும் செங்கிஸ்கானும்
காதங்கள் பலவற்றாலும்
காலங்கள் சிலவற்றாலும் விலகிநின்றாலும்
அவர்கள் களங்களும்
அதற்கான காரணங்களும் ஒன்றாகவே இருந்தன.
எனவேதான்,
என்னைக் கருத்தரித்த விந்துத்துளிகள்
அதாவது—வியர்வைத்துளிகள்
தார்த்தாரியனுடையதா? தமிழனுடையதா
என்ற சர்ச்சைக்கு அப்பாற்பட்டிருந்தன''
(தணிகைச் செல்வன் கவிதைகள். பக்.19)

இதுபோன்ற மொழி அமைப்பில் உரைநடை வீச்சு சற்று அதிக மாகவே உள்ளோடுவதைக் காணலாம். தணிகைச் செல்வன் சொல் வீச்சிலேயே புரட்சிக்குரலைக் கூவிச் செல்லும் பாங்கு வெடிப்புக் குரலாக உள்ளோட்டம் பெற்றுள்ளது. கே. சி. எஸ் அருணாசலத் திடம் நேரடியாக, மெதுவாக, நிதானமாக ஆனால் புரட்சி வீச்சாக வெளிப்படுவதைக் காண்கிறோம். ''சூரியன் கழுத்திலே துண்டைப்போட்டு'' என்ற கவிதையில், இதனைக் காணலாம்;

''பொன்னேர்பூட்டி சாலிறைச்சு
கண்ணே போலக் காத்துழைச்சு
அறுவடையாய்க் குவிச்சுவைப்போம் களத்து மேட்டிலே...
அடுத்த நாளு சோத்துக்கில்லியே நம்மவீட்டிலே
...........
நமக்குண்ணு —ஒரு
பொழுதுவிடியணும்—அது
நம்மாலதான் நடந்து முடியணும்
சூரியன் கழுத்திலே துண்டைப் போட்டு
சுண்டி இழுக்கோணும்
சும்மா நிண்ணா புண்ணியமில்லை—இதை
கண்டு நடக்கோணும்''
(பாட்டு வராத குயில். பக். 22)

ஒரு நாட்டுப்பாடல் இசைமையோடியங்கும் இக்கவிதை, நிலப் பிரபுத்துவ அநீதிக்கெதிரான குரலாகும். தீர்க்கமான, எளிமை

யான, செயல்படவைக்கின்ற, அறிவார்ந்த புரட்சிக் கூவலை இப் பாடலில் காண்கிறோம். கூவலின் புரட்சிக்குரலுக்கு இன்னொரு சரியான சான்றாக, பரிணாமனின் 'வர்க்கப் போராட்ட ஆயுதம் ஏந்துங்கள்' என்ற கவிதையைக் கூறலாம்.

இக்கவிதையின் சிலவரிகள் :

''தோழர்களே......
புயலில் பிறக்கும் நமது பாடல்கள்
பூமியையே பற்றி உலுக்கட்டும்
கொதிப்பில் பிறந்த நம் தத்துவத் தீப்பொறிகள்
இந்திய முதலாளித்துவத்தின்
கொழுப்பிலே பற்றி எரியட்டும்
..................
..................
கைவிலங்குகளைச்
சூரியனில் பொசுக்கிவிட்டு
கரத்திற்கும்
கருத்திற்கும் ஆயுதம் தேடுவோம்!
இமயத்திலேறி
குமரிவரை படர்ந்துள்ள
இந்தியா முழுவதையும் விழிக்கச்செய்வோம்......
..................''

(ஆகஸ்டும் அக்டோபரும், பக், 13-15)

பரிணாமனிடமும் உருவகப் படிமவியல் தூக்கலாக இல்லாமல், சொல் கூர்மை ஓங்கி வெளிப்படுவதைக் காணலாம். பொதுவாக, படிமவியல் ஓங்கி இருப்பதும், குறைந்து இருப்பதும், சொல் கூர்மையே ஓங்கி இருப்பதும், ஆகிய நிலைகள் வேறுபட்ட கவித்துவ ஆளுமையின் வெளிப்பாடுகளேயாகும். கனவுகளில் மிதத்தல், உடனடிச் செயல்படுதலில் விரைவு, வெடிப்பாளுமை ஆகிய பண்புகளின் வேறுபாடுகளேயாகும். குறிப்பிட்ட இயக்கச் சார்பு நிலைகளின் தன்மைக்கேற்ப கவித்துவத்தடம் பதிவாகும் எனலாம்.

கற்பிதமகிழல், கனவுரு, புரட்சிகரக்குரல்—ஆகிய கூறுகளுடன் இணைந்து கூவல் கவிதைகள் அமைந்திருக்கும் பாங்குகள் இது வரை விளக்கப் பெற்றன. பெரும்பாலும், இவை, இயக்கச் சார்பு நிலைகளிலிருந்தே இத்தகைய தோரணையைப் பெறுவனவாயினும், இவற்றிற்குள் காணப்படும் வேறுபாடுகள், கவிஞர்களின் கவித்துவ

ஆளுமைக்கேற்ப அமைவனவே எனலாம். சொல்லியலோ, படிம வியலோ முதன்மைபெறுவது என்பதும் இந்த ஆளுமை வேறு பாட்டின் காரணமாகவே எனலாம். கவித்துவ ஆளுமை மிக்க கவிஞர்களை அடையாளங்காண்பதும் கவிதைத்திறனாய்வின் மிக முக்கியமான நோக்கம் ஆகும்.

### நடப்பனுபவமும் காட்சி ஆக்கமும்

கவிதை படைப்பதில் ஈடுபடுபவர்கள் எப்போதும் ஒரே மாதிரி எழுதுவதில்லை. மனநிலைக்கும் பொருண்மைக்கும் ஏற்ப,-(சூழலுக் கும் ஏற்ப) பல தோரணைகளில் எழுதுவர். எனவேதான் ஒரே கவிஞனிடமே பல நடைத்தோரணைகளைக் காண முடிகிறது. சுப்பிரமணிய பாரதியிடம் இந்த வேறுபாடு இருப்பது முன்னர் விளக்கப் பெற்றது. மொழிப்போக்கில் மட்டுமன்றி, புனைவிலும் கூட வேறுபாடு இருக்கலாம். புதிய சமத்துவம் நோக்கிக் கூவல் தொனியில் எழுதும் பாரதியே, 'குயில் பாட்டு' — எழுதும் போது உள்ளுறை வைத்து எழுதுகிறான். தன் வரலாற்றை எழுதும் போது தன்னிரக்கத்தோடு எழுதுகிறான். இதுபோலவே சமூக நீதி பற்றிய சித்திரிப்புகளிலும் படைப்பாளிகள் பல தடங்களில் நின்று எழுத முடியும். கூவல் தொனியுடன் எழுதும் ஜீவா, நடப்புண்மைகளை அனுபவச் சாரத்துடன் காட்டும் பாங்கிலும் கவிதை எழுதியுள் ளார். அநீதியின் வடிவத்தை உண்மையாகக் கூற விரும்புவதும் இவ்வுண்மை கூறலில் ஒருவகையான காட்சி அடுக்கு புதைந்திருப் பதையும் அறிந்து கொள்ளலாம்; காட்சி அடுக்கு புதை நிலையில் இருக்காமல், வெளிப்படையாக வாழ்க்கை காட்சிகளாகக் கூடச் சில கவிஞர்கள் படைத்துக் காட்டலாம். சிலர், இவற்றினின்றும் வேறாகக் காட்சிப் படிமவியலாக அநீதியை உணர்த்துவதும் உண்டு. இனி இம்மூன்று நிலைகளைப்பற்றி விரிவாகக் காணலாம்.

### நடப்பனுபவம் : புதைநிலைக்காட்சி ஆக்கம்

நடப்பனுபவம் என்ற நிலையில், சமூக மாறுதலின் பின்னணி யில் ஏற்பட்ட பல்வேறு புதிய அனுபவங்களைச் சொல்கின்றனர் கவிஞர் சிலர். புதிய காலத்தின் இயக்கு சக்தியாக இருப்பது அறிவியல். அறிவியலின் சக்தி சமூக அமைப்பு மாற்றத்திற்கும் இட்டுச் செல்லக்கூடியது என்ற நடப்புண்மையைப் பற்றிக் கவிஞர் தமிழ் ஒளி இவ்வாறு பாடுகிறார். இங்கே அறிவியல் நிகழ்த்திய பல்வேறு காட்சிகளைக் காணாவிட்டாலும், அவை பற்றிய உள்ளறிதலை நமக்குக் இக்கவிதை காட்டுகிறது. 'அணுவின்

ஆற்றல்' என்ற இக்கவிதை குறிப்பிடத்தக்க ஒரு கவிதை எனலாம். யாப்பு மரபுக்கட்டுக்குள் அமைந்தது இக்கவிதை।

"புத்துலகப் பேராற்றல் பொங்கும் புதுமைகள்
அத்தனைக்கும் ஊற்றாய் அமைந்த அணுவாற்றல்
பாசிபடிந்த பழங்கருக்கல் பேர்ந்துவிழ
ஆசியா ஐரோப்பா பேதம் அறுந்துவிட
..................
யந்திரம் கொக்கரிக்க ஆலைகள் தாம் சிரிக்க
எந்திரத்தாலே எலாம் நடக்க எங்கெங்கும்
பொய் மடமைபூதம் புராணம் தலைகவிழ
..................
காணும் இடமெல்லாம் கற்பனை ஊற்றெடுக்க
ஆணும் எழிற்பெண்ணும் அன்றே சமத்துவமாய்
..................
விஞ்ஞானப் பூங்கா விரித்த மலர்களாய்
அஞ்ஞானம் நீக்கி அடிமைத்தளை போக்கி
காணாப் புதுயுகத்தின் காதல் பிறப்பெடுக்க
நாணாப் பழங்கொடுமை நஞ்சுண்டு தான் மரிக்க
ஆலயம் ஆக அணுத்தொழிற் சாலைகள்
..................
சூழிய நன்மை சுடர்க பொதுவுடைமை
வீழிய பேதம் விளைக விடுதலையே
என்று மேல் அண்டங்கள் எல்லாம் முழக்கமிட"

(தமிழ் ஒளி கவிதைகள்; பக் 80 - 84)

இக்கவிதைப் பகுதியில் அறிவியல் கொண்டு வந்த தொழில் வளர்ச்சி, பழைமைக்கெதிரான மனப்போக்கு, ஆகியவற்றுடன் ஆண் பெண் சமத்துவம், வர்க்க வேறுபாடற்ற பொது உடைமை வாழ்வு—எனச் சமூகநீதிசார்ந்த அடிப்படையான பல கூறுகள் பற்றித் தமிழ்ஒளி பாடுகிறார். அறிவியல் வளர்ச்சி அறிவியல் மனப் பாங்கையும் சமத்துவ உணர்வையும் ஏற்படுத்தி, சமூகநீதிக்கு இட்டுச்செல்லக் கூடியது என்ற ஓர்மையை (consciousness) தமிழ் ஒளி கவிதையில் காண முடிகிறது. இது குறிப்பிடத்தக்க நவிற்சி.

இதே ஓர்மையை, அறிவியலைக்கண்ட மனிதனைப் பாடுவதன் மூலம் வெ. நா. திருமூர்த்தி வெளிப்படுத்துகிறார். மனிதன்—அறிவியல்—புதிய சமத்துவ சமூகம் என்ற உணர்வு இவரிடமும் வெளிப்பட்டுள்ளது. மரபான யாப்புக்கட்டு இசைமையில் இக் கவிதை வெளியீடாகி உள்ளது.

"நெடுவான் முகட்டு வெளிக்கூடம்
நேர்கீழ் அதலபாதாளம்
இடையிற் சுழலும் கோளங்கள்
எங்கும் எதற்கும் எஜமானாய்த்
தொடர்ந்தைம் பூத இயற்கையினுள்
துருவிப்பல நுண் புதுமைகளை
கடிதொவ் வொன்றாய்ப் பிய்ந்தெறிந்தே
கதிரோன் முதுகிற் சவாரிகொளும்
படியிற் சிறந்த அம்மனிதன்
படைப்பின் திறனைப் பாடுகின்றேன்...
கோரப் புயலின் கொட்டத்தை
அடக்க இடுவான் கடிவாளம்
மூரி இருண்ட உயர்குன்றின்
முகட்டில் எங்கும் ஒளி சேர்ப்பான்
.................
மேடுபிளந்து மலைபிளந்து
விளங்கும் பாதை கண்டவனாய்
காடுகளைந்தே உயிரூட்டும்
கால்வாய் பலவும் தொட்டவனாய்......
................
தூண்டும் சுரண்டல் நியதிகளைச்
சுக்கல் ஆக்கும் மூலிகையாய்
மீண்டும் புதிய சமுதாயம்
விளங்கும் கொள்கைப் பேரொளியாய்
யாண்டும் நிற்கும் அம்மனிதன்
யாரோ அவனைப் பாடுகிறேன்......

(மனிதனைப் பாடுகிறேன். ப. 1)

அறிவியல், மனிதனையும் சமூகத்தையும் மாற்றிச் சுரண்டல் நியதிகளைச் சுக்கல் ஆக்கிச் சமூக நீதியை உருவாக்கவல்லது. மனிதனோ, அந்த அறிவியலையே உருவாக்க வல்லவன்.

சமூகநீதிக்கான பின்புலமாக அறிவியல் மாற்றத்தையும் கவிதையின் புதை அடுக்கில் நடப்பனுபவமாக்கிக் காட்டும் விதத்தில் ஜீவாவும் எழுதியுள்ளார். ஜீவாவிடம் புதை அடுக்குச் சற்றுக் கூடுதலாகத் தன் உருக்காட்டி நிற்கும்.

''காலுக்குச் செருப்புமில்லை
கால்வயிற்றுக் கூழுமில்லை
பாழுக் குழைத்தோமடா—என் தோழனே
பசையற்றுப் போனோமடா
குண்டிக்கொரு துண்டுமில்லை
கொல்வறுமை தாளவில்லை
ஓண்டக் குடிசை இல்லை—என் தோழனே
உழைத்திளைத்துப் போனோமடா?''
(ஜீவாவின் கவிதைகள். பக். 21)

இப்பாடலில் நடப்புக்காட்சியின் ஓரம் தெரிகிறது. முழுக்காட்சியோ புதை அடுக்கு நிலையில் புலப்படுமாறுள்ளது. புதை அடுக்கு நிலையில், சமூகஅநீதிகளை, இரக்கந்தோன்ற வெளிப்படுத்துவதில் கவிமணியின் பாடல்கள் குறிப்பிடத்தக்கவை எனலாம். கவிமணியின் ஆளுமை ''மென்மையான வலிமை'' கொண்டது.

''மங்கையராகப் பிறப்பதற்கே—நல்ல
மாதவம் செய்திட வேண்டுமம்மா';
(மலரு ம்மாலையும் ப. 145)

' ஊக்கம் உடைந்தழும் ஏழைகளைக் காணில்
உள்ளம் உருகத்துடிப்பவர் யார்'' (மேலது ப. 149)

என்று பெண்மையின் பெருமையைக் கனிவுடன் பாடும் கவிமணி, பொருளாதார ஏற்றத்தாழ்வு, சாதீயம் ஆகிய சமூக அநீதிகளைக் ''கனிவு பொங்கும் புதுவிதமான கனல்நடையில்'' சாடுகிறார். 'செல்வமும் வறுமையும் என்ற பாடலில்,

''இட்டளி ஐந்தாறு தின்றோம் என்பீர்—நீங்கள்
ஏதும் கருணை இலீரோ அம்மா!
பட்டினியாக இறந்திடினும்—நாங்கள்
பாவம் செய்ய மாட்டோம் அம்மா!'' (மேலது பக். 173)

என இரக்கம் தோன்றப் பாடுகிறார். தொழிலாளிகளின் தாழ்ந்த நிலைபற்றி இவ்வாறு பாடுகிறார் ;

''பாடுபடுபவர்க்கே—இந்தப்
பாரிடம் சொந்தமையா!
காடுதிருத்தி நல்ல—நாடு
காண்பதவரலவோ?
மந்திர மோதுவதால்—எங்கும்
வயல் விளைவதுண்டோ?
தந்திரப் பேச்சாலே - அரிசி

சாத மாயிடுமோ!

..................

உழுது பயிர் செய்வோன் - வயிற்றுக்
குணவு பற்றாமல்
அமுது நிதம் - நிற்ப
தறியீரோஐயா!

..................

கோடிகோடியாக - நீங்கள்
குவித்திடும் லாபம்
வாடும் எம்மக்கள் - உண்ணா
வயிற்றுச் சோறலவோ?

..................

வாழவேண்டுமெனில் - தொழில்கள்
வளரவேண்டுமையா!
ஏழை என்றொருவன் உலகில்
இருக்கலாகாதையா! (மேலது பக் 177-178)

காந்தியின் அகிம்சை நெறியை உள்ளத்தில் உணர்ந்தவரான கவிமணியின் இப்பாடல், பங்கீட்டு அநீதியை மென்மையாக ஆனால் வலுவாகக் கண்டிக்கிறது. வெறும் மரபுவழிச் சமயச்சடங்குகள் மக்கள் பசிக்கு உணவளிக்காது என்ற பகுத்தறிவு நுட்பமும் கவிதையில் பொதிந்துகிடக்கிறது. ஆனால் கவிதை முடியும் போது, மென்மையான மக்களாட்சிக் குரலே கேட்கிறது. இந்த மெல்லிய, ஆழ்ந்த அன்புக்குரல், சாதீயத்தைச் சாடுவதில் சற்று ஓங்கியே ஒலிக்கிறது. சாதி, பேயாகி உலவுகிறது என்கிறார்.

"பிள்ளைமார் வீட்டிலும் தங்கும் - உயர்
பிராமணர் வீதியில் எங்குமே சுற்றித்
துள்ளி விளையாடி நிற்கும்—அவர்
சோமன் புடவைகளிற் சுற்றிக் கிடக்கும்"

(மேலது பக். 167)

சாதீயம், சமயவாதத்துடன் இணைந்திருப்பதைக் கூறுவதிலும் கவிமணி தயங்கவில்லை.

"பாவிகளை ஈடேற்றிப்
பதமளிக்கும் பரமசிவம்
கோவிலிலே எமைக் கண்டால்
குடிமுழுகிப்போமோ" (மேலது பக். 161)

என்று ஒரு தாழ்த்தப்பட்ட மனிதன் கூறுவதாகப் பாடுகிறார். தாழ்த்தப்பட்ட மக்களிடம் கொண்ட அன்பும் அவர்களுடைய இழி நிலையை மனிதாபிமானத்தோடு வெளிப்படுத்தும் கனிவும் கவிமணிக்கே உரியன.

"சண்டிக் குதிரை மேலே
தொண்டித்துரை சவாரி
கொண்டது போலும் வாழ்வு
கண்டது போதும் ஐயா" (மேலது பக். 166)

வெறும் சட்டம் சாதிய உணர்வைப் போக்காது; மனிதாபிமான உணர்வும் அன்புணர்வுமே சாதியத்தை அழிக்க முடியும். மன மாற்றமே நன்மையைத் தரும். இத்தகைய கனிவும் கனலும் பொதிந்த கவிமணி பாடல்களில் நடப்பனுவப் பொறிகள் கவிதைச் சொற்களில் இழைந்து கிடப்பதைக் காணலாம். வேறுபாடற்ற சமத்துவமான நீதி முறைசார்ந்த வாழ்க்கையை இயற்கையான வாழ்வாகப் பார்க்கிறார் கவிமணி. எனவேதான் பறவைகளைப் பற்றி இவ்வாறு பாடுகிறார்.

"தோட்டிகளுமில்லை—உயர்ந்த
தொண்டமானும் இல்லை
கோட்டை வீடுமில்லை—எளிய
குடியிருப்புமில்லை
குரு மடங்களில்லை—சீடர்
குழாங்கள் ஒன்றுமில்லை
ஒருவர் முன்னே விழுந் தொருவர்
உபசரிப்பதில்லை
அச்சக் கும்பிடில்லை—நடிக்கும்
அன்புக்கும்பிடில்லை
வெற்றி தோல்வியில்லை—பணத்தால்
வெறியும் கொள்வதில்லை
கற்றறிந்தோ மென்று—செருக்கும்
காட்டி நிற்பதில்லை. (மேலது பக். 112)

நடிக்கும், அச்சக்கும்பிடு இவை நடப்புக் காட்சிகள்; புதை நிலையில் புலப்படுகின்றன. இவ்வாறாகச் சமத்துவமான ஓர் அன்புச் சமுதாயத்தைக் காணும் கவிமணி, அதனைப் பொதுவுடைமைச் சமுதாயமாகக் காண்கிறார்.

"தேரும் பொதுவுடைமை—ருசிய
தேசத்திலுள்ள தெல்லாம்
பாரிற் பறவைகளைக் கண்டு
படித்தபாடமேயாம்" (மேலது பக். 118)

இன்று சோவியத்நாடு இல்லை; பொதுவுடைமை என்பது அதனால் பொய்யென்று போய்விடுமா? பொதுவுடைமை—சோசலிசம் என்று தான் சமூக நீதிக்கான எல்லாக் கவிதைக் குரல்களும் பேசுகின்றன. கவிமணியும் அதைத்தான் கூறுகிறார். அவரும் நடப்பனுபவங் களைக் காட்டித்தான் எழுதுகிறார். ஆனால், கவிமணியின் தோரணை வெடிப்பு அரசியல் சாராமல் அமைதியான நாகரிக—அன்புசார்ந்த அரசியலாக (Silent Politics) அமைந்திருப்பது அதன் தனித்தன்மை எனலாம். பல சமயங்களில் ஓங்கிய கூவல்கள் தன்னலத்தின் மறைவடிவமாக மாறித் தெரியக்கூடும், ஆழ்ந்த அன்பும் நாகரிகமும் இழையோடா விட்டால்!

நடப்பனுபவம், புதைநிலைக் காட்சி ஆக்கத்துடன் வெளிப் படுவதைப் புதுக்கவிதையிலும் காணலாம். இன்று, கடவுளின் பெயரால், பக்தி என்ற பெயரில் நிகழும் அநீதிகளைக் கண்டு மென்மையாக இரங்குகிறார் துறவி. 'மணிஓசை' என்ற கவிதையில் அவர் இவ்வாறு எழுதுகிறார்,

"மனசு முழுதும் இருளை
நிரப்பிக்கொண்டு
இவர்கள் சரவிளக்கு
ஏற்றுவதைப்பார்த்தால்
சிரிப்புத்தான் வருகிறது.
பக்தி என்று
இவர்கள் பூக்கள்
கொய்யும்போது
செடிகளின் ஆன்மாவில்
ரத்தம் கசியும்......
இங்கே
குவியும் கைகளில்
ஆசைகளின் குவியல்கள்......
..................
அதோடு
வழிபாடு முடிந்து
வருவோரின் காலடிகளில்
மிதிபடும் பக்தி" (சூடுபறிக்கப்பட்ட சூரியன்கள்)

கடவுள்—பக்தி சார்ந்த பண்பாட்டு நடத்தைகள் எவ்வாறு சமூகச் சீர்கேடாகி, பணமதிப்பு சார்ந்து, அநீதியின் பக்கம் இயங்கி வருகின்றன என்பது பற்றிய கவிதைகள் மிக அருகியே வெளிப்பட்டுள்ளன. இனி, பெண் விடுதலை பற்றிய வலிமிகுந்த ஒரு கவிதை நடப்பனுபவச் சித்திரிப்பில் குறிப்பிடத்தக்கது. பெண் என்பவள், எவ்வாறு காமச்சுவைக்குரியவளாகவும் வேலை செய்யும் எந்திரமாகவும் மட்டும் கருதப்படுகிறாள், அவள் ஒரு மனித உயிர் என்று எண்ணப்படுவதில்லை என்ற சமூக அநீதியை எடுத்துக் காட்டுகிறது இக்கவிதை. அ. சங்கரி எழுதிய கவிதை இது :

''எனக்கு
முகம் இல்லை
இதயம் இல்லை
ஆத்மாவும் இல்லை
அவர்கள் பார்வையில்
இரண்டு மார்புகள்
நீண்ட கூந்தல்
சிறிய இடை
பருத்த தொடை
இவைகளே உள்ளன.
சமையல் செய்தல்
படுக்கையை விரித்தல்
குழந்தை பெறுதல்
பணிந்து நடத்தல்
இவையே எனது கடமைகள் ஆகும்
கற்பு பற்றியும்
மழை பெய்யெனப் பெய்வது பற்றியும்
கதைக்கு
அவர்கள்
எப்போதும் என் உடலையே
நோக்குவர்.
கணவன் தொடக்கம்
கடைக்காரன் வரைக்கும்
இதுவே வழக்கம்'' (சொல்லாத சேதிகள். பக். 9-10)

இத்தகைய நடப்பனுபவக் கவிதைகளில் கூரிய சொற்கள் கவித்துவ ஆற்றலைக் கொண்டு செல்வனவாக அமைவதைக் காணலாம்.

**விரிவுநிலைக்காட்சி ஆக்கம்**

இனி, நடப்பனுபவத்தையே சற்று விரிவான காட்சிகள் மூலம் வெளிப்படுத்தும் பாங்கினையும் சமூகநீதி சார்ந்த கவிதைகளில் காண்கிறோம். முன்னைய புதைஅடுக்கு நிலையிலிருந்து சற்று விரிவு பெற்ற நிலை இது; காட்சிநிலை சற்று கூடுதலாக இருக்கும் என்பது மட்டுமே வேறுபாடு எனலாம்.

வெ. நா. திருமூர்த்தி வறுமையின் கொடுமையைக் கூறும் முறையில் ஒரு பிச்சைக்காரி மரத்தடியில் இருக்கும் காட்சியைக் காட்டுகிறார்.

''நடக்கின்ற பாதையிலோர் புளியமரத்தின் கீழ்
நள்ளிரவில் இருள் கப்பித் தூற்றலிடும் வேளை
அடுப்புக்கல் எனக்குந்தி இருக்கின்ற உருவம்
அங்கிருந்த காற்றினிலே வருமுனகல் சத்தம்
துடிக்கின்ற நொடிப்பொழுதில் மரணத்தின் வாயில்
தொடநிற்கும் அறிகுறிகள் புலப்படுத்தும் வண்ணம்
எடுக்கின்ற மேல்மூச்சுத் திணறலொடு எங்கும்
ஈக்களுமே மொய்த்திருக்க வேதனையில் சிக்கி
கிடக்கின்ற கற்குவியலில் ஓர்பகுதி யாகக்
கீழ் சுருண்டு கிடக்கின்றாள் பெருங்கிழவி ஒருத்தி''

(மனிதனைப் பாடுகிறேன் பக். 63)

'பிச்சைக்காரி' என்ற இக்கவிதையின் முதல் பகுதி இது. மரபான யாப்புக்கட்டுடன் இக்கவிதை வறுமைக்காட்சியை நடப்பனுபவத்தோடு கண்முன் காட்சிப்படுத்துகிறது. இதுபோன்ற சமூகஅநீதிக் காட்சிகள், இயல்பாக, யாப்புக்கட்டுக் கவிதைகளில் கவித்துவ ஆற்றலுடன், வெளிப்பட்டிருப்பது, பாரதிதாசனுக்குப் பிறகு அருகியே உள்ளது. பெரும்பாலும் பாரதி, பாரதிதாசன் போல 'போன்மைக்' கவிதைகளே மிகச் செயற்கையாக வெளிப்பட்டுள்ளன. நா. காமராசன் எழுதிய, பிச்சைக்காரி பற்றிய ஒரு கவிதையில் அவருடைய உணர்ச்சிக் குரல்களே 'கேட்கின்றன.'

யாப்புக்கட்டற்ற புதுமரபுக் கவிதைகளில் இத்தகைய காட்சிகள் மிக இயல்பாகவும் சமூக உணர்வுடனும் மிகுதியாக வெளிப்படுத்தப்பட்டுள்ளன. புதுக்கவிதைக்குத் தொடக்கம் செய்தவர் என்ற பெருமைக்குரிய ந. பிச்சமூர்த்தி, மார்கழிப் பெருமை என்ற கவிதையில் மார்கழி மாதக் குளிர்ப்பின்னணியில் துன்புறும் குழந்தைகள் பற்றிய காட்சியைக் காட்டுகிறார்.

''அதோ காலுக்குச் சோடும் காதுக்குக் குல்லாயும்
கம்பளி மூடிய கனவானைப் போல
அங்கி அணிந்த அருமைக் குழந்தைகள்
பஜனையைப் பார்த்துக் களிக்கவே வருகிறார்
இதோ கொசு மொய்க்கும் சாலவம்
தெரு வெங்கும் எச்சில் இலைகளின் இளிப்பு
மார்கழிப் பெருமையில் தோட்டிக்குத் தேவாரமுண்டோ
தெருக் கூட்டிக்குக் கம்பளிஉண்டோ
மார்கழிக்குளிரில் ஓர் குழந்தை கிடக்குது
ஒருபத்தைப் புல்லே மெத்தையாய் விட்டது
விசும்பி உதைத்தாலும் வானம் விழாது
அன்னையை நினைத்துக் குழந்தை அலறுது
கூடவே நாயும் குரலோசை காட்டுது!
ஈனத்தொழில் செய்யும் தோட்டிச்சி ஒருத்தி
கூடையைக் கைவிட்டு குழந்தையைத் தூக்குகிறாள்
அன்னையின் மார்பில் அலறல் ஓடுது.........

(பிச்சமூர்த்தி கவிதைகள், பக். 23)

பணக்கார மற்றும் ஏழைக் குழந்தைகளின் தோற்றத்தை ஒப்பிட்டுக்காட்டும் ந. பி. இன்னொரு கவிதையில், இந்திய விடுதலை மக்களுக்கு நீதி வழங்கவில்லை, என்ற கருத்தை விடுதலை வெள்ளி விழாக் காட்சி ஒன்று மூலம் சுட்டிக்காட்டுகிறார்.

''சுதந்திர தின வெள்ளிவிழாவுக்கு
மெரினாவில்
காந்திசிலை முதல்
விவேகானந்தர்வரை
சவுக்குமுளை அடித்து
குறுக்குக் கழிகட்டி
வேடிக்கை பார்க்க வரும் வெள்ளம்
அணிவகுப்பை அழிக்காமல்
வெற்றிக்கு வித்திட்ட கண்டிராக்டர்
மறுநாள் கணக்குப் பார்த்தார்
நல்ல ஆதாயம்
மக்கள் கணக்குப்பார்த்தார்
விழா தான் ஆதாயம்......
தாலைக் கருக்கிருட்டில்

சுள்ளி பொறுக்கவந்த கிழவிக்கு
சவுக்குப் பட்டைகளை
உரித்தெடுத்துக் கொண்டபோது
ஆளரவம் கேட்டதனால்
ஆதாயம் குறைப்பிரசவம்...... (மேலது ப. 193)

புதுக்கவிதை இயக்கம் தொடங்கிய ந. பிச்சமூர்த்தியிடமே சமூகநீதிக் கவிதைகள் தோன்றியுள்ளன. புதுக்கவிதையின் தொடக்ககாலத்தில் அகஉளைச்சல்களே பாடப்பட்டன என்ற சில முற்போக்கு மேதாவிகளின் குற்றச்சாட்டு உண்மைக்கு மாறானது என்பதை ந.பி.யின்பாடல் மூலம் அறியலாம். அகஉளைச்சல் கருத்து இன்னும் கூடச்சிலரால் மேற்கொள்ளப்பட்டு, இப்படிக் கூறுவது ஒரு கூட்டப்பண்பாகி விட்டது. கூட்டத்தைச் சேர்த்துக் கொண்டால் உண்மையை எளிதில் அமுக்கிவிடுதல் இயலுவதே! தன்னல, கொச்சைப் பொருள் முதல்வாத மன அழுக்குகள் முற்போக்குப் போர்வை போர்த்திக் கொள்ளும் போது உண்மைகளைக் கூறுவதும் அறிவதும் ஆராய்வதும் எந்தக் காலத்திலும், எந்த நாட்டிலும் நடவாது.

வறுமைக் காட்சியைக் காட்டுவதில் ஞானக்கூத்தனின் போக்கு தனித்துவமான முறையில் அமைந்துள்ளது. ஒரு வேலைக்காரிக்கும் அவள் மகனுக்குமிடையிலான உரையாடலாக அமையும்கவிதையில் பசியின் கொடுமை காட்டப்படுகிறது. மதிய உணவுக்கு வழியில்லாத நிலையைக் கூறுவதே இக்கவிதை.

''கொட்டிக் கொண்டு போயேன்டா
தட்டு கொண்டு வாயேன்மா
தொட்டுக் கொள்ளப் போடேன்மா
கட்டை விரலைத் தொட்டுக்கொள்......
பள்ளிக்கூடம் போறேன்'மா
பாதை பார்த்துப் போய்வாடா
கையில் கட்டித் தருவாயா
கையைக் கனக்கும் வேண்டாம்டா
மத்தியானம் வருவேன்மா
வெயிலில் வந்து சாகாதே
மத்தியானம் வருவேன் நான்
பத்துப்பானை தேய்ப்பதற்கா''

(அன்று வேறு கிழமை)

இக்கவிதையின் தனித்துவமான உரையாடல் அமைப்பு மூலம் மதிய உணவற்ற ஏழைக்குடும்பக் காட்சியைக் காண்கிறோம். இன்றைய சமூகத்தின் பங்கீட்டு அநீதியின் காட்சியே அக்கவிதை காட்டுவது.

சிவவாக்கியாரின் கோயில் பண்பாட்டுக் கவிதையை முன் பகுதியில் பார்த்தோம். கோயில் பண்பாட்டின் ஆழமான சொத்து நோக்கை—நிலஉடைமைப்பண்பை—விக்ரமாதித்தன் ஒரு கவிதையில் அமைக்கிறார்.

''வாசல்
நான்கு
சந்நிதி
இரண்டு
சுயம்புலிங்கம்
சொல்ல ஒரு விஷேசம்
அம்மன்
அழகு சுமந்தவள்
ஐந்து கால
பூஜை நைவேத்தியம்
பள்ளியறையில்
பாலும் பழமும்
ஸ்தலவிருக்ஷம் பிரகாசம்
நந்தவனம் பொற்றாமரைக்குளம்
வசந்தோற்சவம் தேரோட்டம்
நவராத்திரி சிவராத்திரி
பட்டர் சொல்லும் மந்திரம்
ஓதுவார் பாடும் தேவார திருவாசகம்
சேர்த்துவைத்த சொத்து
வந்து சேரும் குத்தகை
ஆகமம் ஆசாரம்
தவறாத நியமம்
தெய்வமும்
ஐதிகத்தில் வாழும்''

(உள் வாங்கும் உலகம், பக் 10-11)

இக்கவிதை பெரிய மடங்கள் சார்ந்த கோயில் நிலவுடைமையைச் சுட்டுவது. காலமாற்றத்தில், புதிய பணமதிப்புச் சமுதாயத்தில் ஏழைப் பிராமணர்களின் வறுமையைக் கோயில் காட்சிப் பின்னணி

யில் காட்டுகிறார் கலாப்ரியா. கோவில் குருக்கள்வீட்டுப்பிராமணப் பையனையும், தானம் வாங்கச் செல்லும் அவன் தந்தையையும் காட்டுகிறார் கலாப்ரியா, 'எட்டயபுரம்' என்ற நெடுங்கவிதையில்:

"விடுமுறை வீணாக்காமல்
சகபாடிகள்
தெருவில் விளையாடிக்கழிக்க
கனபாடிகளுடன்
உபநயனம் வாசித்து
தானம்வாங்கச் சென்ற
அப்பாவுக்குப் பதில்
பூஜைமுறை பார்ப்பான்
கல்லாவின் புடை அமர்ந்து
வல்லார்க்கு உரைக்கும்
ஞானகுருவுக்கு
கற்பூரம் காட்டி
காணிக்கை கேட்பான்
அம்பி..." (பக். 13)

காணிக்கையே இங்கே முதன்மை; வறுமையைக் காட்டும் சொல் 'எட்டயபுரம்' என்ற நெடுங்கவிதையில், கிராமத்துஎளிய வேளாண் மைக் கூலி மக்களையும், புறநகரிலுள்ள பெரிய வீட்டுக்காரர் களையும்பிரித்து வர்க்கவேறுபாட்டை உணர்த்தி, பங்கீட்டு அநீதிக் காட்சிகளைக் காட்டுகிறார். தோட்டியின் வறுமைக்காட்சி இதோ :

"மாசம் பொறந்தாச் சுல்லே
என்று மாதவட்டிக் காரன்
சொல்லிப் போன
மக்யா நாளிலிருந்து
பஸ்வரும்—போகும்
பாதையோரம் குந்தியிருந்து
அலுத்து
பீடிவலித்துத்
தொண்டை வரளக்காத்திருக்கும்
தோட்டியை" (மேலது பக். 17)

கல்விபெற முடியாமல் போய்விட்ட, வேளாண்மைச் சிறுவனைப் பற்றிய காட்சி:

''மூன்றாம் வகுப்போடு
படிப்பையும் தொழிலையும்
பிரிந்த
தட்சிணாமூர்த்தி
எழுத்துக் கூட்டி
தந்திப்பேப்பர் பார்ப்பான்
சலூன் வாசலில் நின்று
....................................................
....................................................
வாமடை போட்டு வைத்துவிட்டு
செம்புலப் பெயல்நீர்
அலையாடும்
குளக்கரை அமர்ந்து
ஈர மண்ணில், சுள்ளியால்
இரண்டாம் வாய்ப்பாடு
பூராவும்
எழுதிப் பூரிப்பான்'' (மேலது பக். 19)

வேளாண்மைக் கூலிவேலைப் பெண்கள்கெடுக்கப்படுவதையும் கருக் கலைப்புக் கொடுமையையும் சுட்டிக்காட்டுக்கிறார் கலாப்ரியா :

''போன கதிரறுப்பில்
புகையிலைத்துணுக்கு
கேட்கப் போய்
கங்காணியின்
கருத்தாங்குவதை உணர்வாள்
ஏரப்பில் சொருகியிருக்கும்
பழந்துணி எடுத்துக்
கொண்டு
பண்டுவச்சி தேடிப்போவாள்
குச்சிவைக்க......'' (மேலது பக். 21)

இவ்வாறு கிராமத்து மக்கள் வாழும் அவல நிலையைக் காட்டும் கலாப்ரியா புதிய பணக்காரர்களையும் இந்தச் சூழலில் காட்டி விடுகிறார்.

''நன்றாயிளந் தென்றல்
வரவேண்டுமென்று
எட்டயபுரத்தில்

புறநகரில்
புது வீடுகட்டிக்கொண்டார்
சிலர்'' (மேலது பக். 23)

சமூகஅநீதிக்காட்சிகளைக் காட்டுவதில் பாரதி புத்திரன் குறிப்பிடத்தக்கவர். ஒரு தொழிலாளியின் வாழ்க்கைப்போராட்டத்தை அவன் வாழும் ஆலைச் சூழலுடன் காட்டுகிறார்.

''முப்பதுவருடங்களை
இந்த ஆலைச்சுவர் பார்த்திருந்தது
பருத்திருந்த உடல்சிறுத்ததை
புடைத்திருந்த நரம்புகள் தளர்ந்ததை
மூச்சுக்குழாயில் புகையைச் சுவாசித்ததை
கூடாகி நெஞ்சு துருத்திவெளிவந்ததை
எச்சிலோடு ரத்தம் துப்பியதை
போலீசுடன் சென்றதை
பின்னர்
இருமத் தொடங்கியதையும்
கெஞ்சிக் கூத்தாடி வேலையில் நிலைத்ததையும்
அவர்கள் வரும்போது
மிரட்சியுடன் அவசரமாய்
வேலை செய்ததையும்கூட
அந்த ஆலைச்சுவர் பார்த்திருந்தது''
(மனஓசை, சூலை 86)

பெரும் இலாபத்தினைத் தரும் உழைப்புக்கு உரியவனான தொழிலாளி, எத்தகைய அவலமான கொடுமையான வாழ்நிலையில் இருக்கிறான் என்பதை மிகநுட்பமாக, பரிவும் வேதனையும் மிகுந்த சொற்களில் பாரதிபுத்திரன் காட்டுவது, சமூக அநீதியின் தோற்றத்தைக் காட்டுவதாக உள்ளது.

இன்றைய சமூக அமைப்பில், பங்கீட்டுநீதிக்கேற்ற வழிமுறைகள் இல்லாததால், வேலையின்மை என்பதும் அதனால் வாழ்க்கை வீணாகிப்போவதும் பெரியதோர் சமூகநிகழ்ச்சியாகக் காணப்படுகிறது. வேலையின்மையால் இளைஞர்கள் போதைக்கு அடிமையாகி அழிந்துபோகும் ஒரு காட்சியை சமயவேல் காட்டுகிறார்.

''ஊரெல்லாம் தூங்கிப்போன
அந்த அகாலத்தில்
கங்குதான் அவர்களைக் காட்டிக்கொடுத்தது
கஞ்சாப்புகைவீசிய இருட்டுக்குள்

அவனும் அவனும்
கருப்பாய் உட்கார்ந்திருந்தார்கள்
நேரத்தில் தூங்கி
ஏழுவருஷமாகிறது என்றார்கள்
அவன் முடிவற்றுக்
காதலித்துக் கொண்டிருந்தான்
ஒரு டீச்சரை
இவன் சதாபுகை பிடித்துக்
கொண்டிருந்தான் வேலையில்லாமல்
அவனுக்கு இவன் இவனுக்கு அவன்
மௌனமாய் இருளில்
கரைந்து கொண்டிருந்த என்னை
நீங்கள்போய் தூங்குங்கள் என்றார்கள்
அவனும் அவனும் தொடர்ந்து
பேசிக் கொண்டிருக்கிறார்கள்'' (காற்றின்பாடல் பக்.10)

வாழ்க்கையின் எளிய வறுமைக் கோலத்தைக் குடும்பம் என்ற அன்பு வட்டத்திற்குள், குடும்பத்தினரின் அன்பு உரையாடல் மூலம் காட்சிப்படுத்துகிறார் பழமலை.

''கேட்கிறாய் : இப்படியுமா இருப்பார்கள்!
வாழப்பழத் தோலையா தின்பார்கள் என்கிறாய்
நாங்கள் சிற்றூர் 'நடுகள்'
'அடிகளின்' கதையைக் கேட்டால்
வாய் அடைத்துப் போவாய்
உழைப்பவர்கள், கஞ்சியில்
இடும்உப்பு கரைவது—முகம்பார்த்து''
(சனங்களின் கதை பக். 75-76)

வாழைப்பழத்தோலும், கஞ்சியும், உப்புமாக—பங்கீட்டு அநீதியின் காட்சிகளைக் காண்கிறோம்.

யாழ்ப்பாணத்தில் காணப்படும் மேல்சாதி வெறி பற்றி வ. ஐ. ச. ஜெயபாலன் ஒரு கவிதையில் காட்சிப்படுத்துகிறார் மேல்சாதி வெள்ளாளர் குளிக்கும் குளத்தில் குளிக்க நினைத்த ஒரு கீழ்ச்சாதி சிறுவனிடம் கீழ்ச்சாதி முதியவர்கள் இவ்வாறு கூறுகிறார்கள்.

''குளித்ததற்காக உங்கள் மாமனை
தென்னை மரத்துடன் வெட்டி வீழ்த்தி
சென்றவருடம் கொன்றனர் பாவிகள்''

எனஒப்பாரி வைக்கின்றனர் முதியவர்கள். இளைஞர்களோ எதிர்த்து நின்று கல்லெறிகின்றனர். இதுகண்டு 'கிழடுகள்' அஞ்சுகின்றனர்.

"நாங்கள் வளருவோம் நாங்கள் நிமிருவோம்
அந்தமரத்தின் இலைகளைத் தொடுவோம்
நாங்கள் இந்தக்குளத்தில் குளிப்போம்
சிறுவன் மீண்டுமோர் கல்லை விட்டெறிவான்
மாரிவெள்ளத் தேக்கம் கண்டு
கிழடுகள் அஞ்சும். இளசுகள் விம்மும்
மாவிட்டபுரத்துக் கோவில் வாசல்
தடைகளைத் தகர்த்தவர் சந்ததிநாங்கள்
என்பது போலச் சிறுசுகள் மட்டும்
முன்னே விரியும் வயல் வெளியினிலே
கற்களைத் தேடிக் கண்களை எறியும்"
(நமக்கென்றோர் புல்வெளி பக். 32-33)

எதிர்த்துத்தாக்கும் காட்சிகளை இக்கவிதையில் காண்கிறோம்.

நடப்பனுபவத்தைப் புதை அடுக்குநிலையிலோ அல்லது முழுத் தூல நிலையிலோ காட்சிப்படுத்தல் என்பது, சமூக அநீதிகளை நடப்பியலோடு காட்ட எண்ணுவதில், இருபதாம் நூற்றாண்டில் ஏற்பட்ட கூடுதலான முனைப்பு எனலாம். நடப்பியலாகச் சமூக வாழ்வின் சிக்கல்களைக் காட்டும் போக்கே இருபதாம் நூற்றாண்டில் வளர்ந்த ஓர் அணுகு முறைதான். ஆனால், பழைய யாப்பு மரபுக்கட்டுடன் எழுதும் கவிஞர்களிடம் இன்று இத்தகைய நுட்பமான காட்சிப்படுத்தல், ஆற்றலுடன் வெளிப்படவில்லை என்றே தோன்றுகிறது. நடப்பியலான அலசலுக்குப் பழைய யாப்பு வடிவம் பொருந்தாது என்று சொல்வதா அல்லது பொருந்தும் முறையில் எழுதும் திறன் கொண்ட ஒரு கவிஞன் தோன்றவில்லை என்று சொல்வதா? புரட்சிக்கவிஞர் ஒரு கவிதையில் மிக எளிமையாக வறுமைக்காட்சியைக் கொண்டுவருகிறார்.

"தென்னந் தோப்புக்குள்ளே—அதில்
சிறியகுடிசைக்குள்ளே
ஒன்றல்ல இரண்டல்ல—மிக
ஒழுங்காய் ஏழுபிள்ளை
அன்னையோ நோயாளி—நல்
அப்பன் தொழிலாளி

இன்றைக்கெல்லாம் தொல்லை—அவர்
எவரும் சாப்பிட வில்லை.
வேலைகிடைக்கவில்லை—தம்
வீட்டில் அரிசியும் இல்லை
பாலுக்கழும் ஓர்பிள்ளை—நல்ல
பருக்கைக் கழும்ஓர்பிள்ளை
ஓலைக் குடிசையில் எங்கும்—வாய்
ஓயா அழுகை பொங்கும்
காலை கிடைத்தது வேலை—பின்
கண்டார் கூழை மாலை,' (ஏழ்மை)

பாரதிதாசனிடம் இருக்கும் எளிமைக்குள் உண்மையான ஓர் உணர்வு பொதிவு பெற்றிருப்பதை அறியலாம். இதுபோன்ற உண்மை உணர்வும் தனித்துவமான மொழித்திறனும் யாப்புக்கட்டு வழியில் எழுதுவோரிடம் வெளிப்பட்டுள்ளது என்று கூறமுடிய வில்லை.

படிமவியற் காட்சி ஆக்கம்

புலனனுபவ உருக்களை (Images) மொழியில் காட்டும் முறை மையேபடிமவியல் (Imagery) அமைப்பாகும். இவ்வுருக்கள், காட்சி, ஒலி, மணம், சுவை, தொடல் ஆகிய ஐம்புலன்நிலைகளிலும், இவை இணைந்த பல நிலைகளிலும் கவிஞனால் உணர்வுக்கு ஏற்பவும், பொருண்மைக்கேற்பவும் படைக்கப்பெறுவன. உவமை, உருவகம் ஆகியநிலைகளிலிருந்து, —மிக எளிய நிலையில், ஒன்றிற்கு ஒன்று என்ற ஒப்புமை நிலையிலிருந்து—முற்றுருவக நிலைவரை அமைக் கப்படலாம். ஆயினும் இவை பெரும்பாலும் பொருள் விளக்கத் துணை உத்திகள் போலவே செயல்படும். இத்தகைய செயல்பாடு புதுக்காலக் கவிதைகளில் சற்று வேறுபட்டு அமையும். படிமமே பொருண்மையாக நிற்பதுண்டு. பல்வேறுகிளைச்செறிவு(Complex) உணர்வோட்டங்கள் ''படிமமாகவே'' வெளிப்படும் கவிதை மொழி யாக முதன்மைநிலைபெறுவதுண்டு; துணை உத்திநிலையிலிருந்து சற்றுக்கூடிய முதன்மை நிலைக்குச் செல்லும் வளர்ச்சி இது. இத் தகைய கவிதைகளையே படிமமுதன்மைக் (Imagist) கவிதை என் கிறோம்.

சமூகநீதிக் கவிதைகளைக் காணும்போது பெரும்பாலும் நேரடிச் சொல் முறைமைகளே பெரும் பங்குவகிப்பதுண்டு. படிமங் களாகச் சிந்திப்பது என்பது இத்தகைய பொதுநீதிநிலையில் அவ்வு

ளவாகப் பலருக்கு இயலாது. ஒருசிலர்க்கே இது முடியும். ஏனெனில் படிம உருவழிச்சிந்தனை என்பது தனியொருவரின் ஆழ்ந்த உளக் கூறுகளாலும் பட்டறிவுகளாலுமான குறியீடுகளாகவே (Symbol) இருக்கும். உள்முகமான பார்வைகளுக்கே இதுமிகுதியும் இணைந்து செல்லும். ஆயினும் புறமுகப்பார்வைக்கும், சிலரால், இது பெருமை சேர்த்துள்ளது. இதில் இரண்டு நிலைகளைக் காணலாம். ஒன்று : கவிதை முழுதுமே படிமமாகி நிற்பது. இரண்டு : கவிதையின் சிறப்புப் பகுதி மூலம் பொருண்மையின் மையத்தைப் படிமமாகக் காட்டுவது.

படிம முதன்மை கொண்ட கவிதைகள் புதுக்கவிதைகள் அறிமுகமான பின்பே தமிழில் தோன்றின எனலாம். அவற்றிலும் சமூக நீதிசார்ந்து எழுதப்பெற்றிருப்பவை மிகக்குறைவே எனலாம். தரும அருப்சிவராம் ஒரு கவிதையில், சமத்துவமற்ற மனிதநிலைக்கு எதிராக ஆதிக்கத்தினை எதிர்த்துப் போரிடும் போராளிக்குணம் பற்றிஒரு கவிதை எழுதியுள்ளார். எகிப்து நாட்டின் ''பிரமிட்'' பற்றிய குறிப்புடன் இக்கவிதை தொடங்குகிறது.

பிரமிட்

''மண்புயல் தணிந்துவிட்டது
ஆனால் போர் தொடர்கிறது—இடம்பெயர்கிறது.
சாந்தி வீரர்கள்கூட
ஆபீஸைக்கலைத்துவிட்டு
யுத்த சந்நத்தர்களாகின்றனர்.
இப்படியே பிரமிட்படிகளில்
காலம் உயிர்களை உருளவிடுகிறது—
மலைச்சரிவில் உதிரிஇலைகளைப் போல.
ஆனால் வீரனின் உயிரோ
கற்பாறைகளின் சிறுகற்கள் போல
கணம்தான் என்றாலும்
ஏதோ ஒரு யோசனையில்
உச்சியை நோக்கி எழக்கூடும்.
உடல்தான் பிரமிட்டுள்ளேயே பதுமையாகக்கிடந்து
கடவுளரை எதிர்பார்க்கிறது'' (கசடதபற 4)

இக்கவிதைகாலங்காலமான சமூகஅநீதிவடிவமான அடக்கு முறைக்கு எதிரான போரைப் படிமங்களாகக் காட்டுகின்றது. போர்க்குணத்தின் செயல்பாடாகவே படிமங்கள் கவிதை மொழி

யாகி உள்ளன. இக்கவிதையின், இதன் உள்ளார்ந்த ஆற்றலில், குறிப்பாய் உணர்த்தும் பாங்கே உள்ளது. பிரமிள் எனவும் கூறப் பெறும் தருமஅரூப்சிவராம் சமூகஅநீதியை மட்டும் கவிதையாக் கியவரல்ல; தனிமனிதனின் பட்டறிவுகள் பலவற்றைப் படிமமாக்கு வதில் பெரும்பங்காற்றியவர். பிறகவிஞர்களிடம் இவரிடம் வெளிப் படும் படிமக்கட்டுச்செறிவு, இல்லாவிட்டாலும், சற்றுநெகிழ்ந்த, விளக்கத் தன்மையுடன் வேறுபலசமூக உணர்வுப் படிவவியல்காட்சி ஆக்கங்கள் உள்ளன. குவேராவின் ஒருகவிதை.

''ஆளும் வர்க்க
ஆக்டோபஸ் நெளிகிறது.
அரசியல் சட்டங்கள்
அடிவருடிக் காட்சிகள்
தேர்தல் கூத்துக்கள்
திண்ணை ஜனநாயகங்கள்
உறிஞ்சு குழல்கள்
உறிகின்றன.
நடுவில் ஒரு நீர்ப்பூ
இதழ்கள் பிரிகின்றன
மலரின் ஜீவனில் ஆக்டோபஸ்
கரங்கள்''         (ஆக்டோபஸும் நீர்ப்பூவும் பக். 1)

இக்கவிதையில் காட்சிப் படிமவியலானது உத்திநிலை தாண்டிக் கவிதையின் முழு முதல் வடிவமாகவே ஆகியுள்ளதைக் காணலாம். இடையில் உள்ள சில விளக்கக் குறிப்புக்கள் சற்று நெருடலாக இருந்தாலும், இதிலுள்ள சிறப்பு, இது கனவுருவாக்க விருப்ப நிறைவாக இல்லாமையேயாகும். வானம்பாடிக் கவிதைப் போக்குக்கு மாறுபட்டது. உண்மை சார்ந்த ஒரு வேகம் கவிதைக் குள் இடம் பெற்றிருப்பதே இக்கவிதைகளின் தன்மை; இதனுள் நுட்பமான நடப்பனுபவக்கூறு இருக்கும். கனவுமயமான கற்ப னைச்சிறகு விரிப்புக்கு இடம் இல்லை. உவமையின் கையாளுகை யில்கூட இத்தகைய வேகம் அமைந்துவிடுவதுண்டு.

''கல் இடுக்குகளில்
மண்ணைப் புரட்டி
புல் இதழ்விரிக்கும் அறுகினைப்போல்
தொடுவான் இடற
சுதந்திரச்சிறகுகள் விரித்ததென்
ஆன்மா''         (சூரியனோடு பேசுதல் பக். 21)

இங்கும் 'சிறகுப்' படிமம் வருகிறது. ஆயின் இக்கவிதையின் ஒட்டு மொத்தக் காட்சிப் படிமவியலானது கற்பனைச்சிறகு கொண்ட கனவுமயப்பறத்தலாக இல்லாமல், ஆழ்ந்த செயல்வலுக்கான ஊற்றமாக அமைந்துள்ளது. இன்றைய சட்டங்கள் எவ்வாறு சமூகப் பொதுநீதி சாராமல் ஒருபால் சாய்ந்துள்ளன என்பதைக் கலாப்பிரியா, கீழ்க்கண்டவாறு கூறுகிறார்.

விளக்கங்களோடு வரும் படிமவியல் இது

''நீ ஆளுங்கட்சிக்
காரனென்றால்
மேடையிலிருந்து கத்தியெறி
கைதட்டாதவன் மீது......
.........................................
.........................................
தாமரைப் பூக்களை
இலைகளுடன் பூக்கவிடாதே
வானம் முழுக்க
பிரதிபலிக்க நினைக்கிற
நீர்முத்துக்கள்
அதன்மேல்
அநாவசியமாய்
பிரகாசிக்கும்'' (சுயம்வரம் மற்றும் கவிதைகள், பக். 5-6)

காட்சி அளவிலான இப்படிமவியல் ஆழந்த நிலையில் விமர்சனமாகிறது. சமூக அநீதிக்கெதிரான எதிர்ப்புணர்வுகூட இல்லாமல் மக்கள் காட்சியளிக்கும் நிலையைப் படிம முதன்மைக் கவிதைபோலவே (ஆனால் விளக்கத்துடன்) பாரதிபுத்திரன் எழுதியுள்ளார்,

''சின்னஞ்சிறிய
பாம்புகள்கூட
சீறிஎழுந்து கடிக்கிறதே.
ரேஷன் கடை வாசலில்
அலுவலக வெளிகளில்
வேலை வாய்ப்பு அலுவலகத்தில் என
எங்குபார்த்தாலும் நீண்டுகிடக்கும்
இத்தனை பெரியபாம்புகள்
செத்தா கிடக்கின்றன'' (மணிஓசை சன. 83)

பாம்புப் படிமம் இங்கே, அடங்கியிருக்கும் உணர்வு வடிவமாகக் காட்டப்படுகிறது. இனி, அடுத்துக் குறிப்பிடத்தக்க இன்னொரு படைப்பு தேவதேவனின் 'அகழி' என்ற நெடுங்கவிதையாகும். சங்க காலத்து மதுரைக்காஞ்சி, பட்டினப்பாலை போன்ற உரைக்கவிதை அமைப்பில் 16 பக்கங்களைக் கொண்ட இக்கவிதை அரிய படைப்பு, சமூகநீதி பற்றிய ஒரு முழுமையான படைப்பு. இதில் நடப்பனுபவக்காட்சிகளும் உருவகப் பாங்கும் இடம் பெற்றுள்ளன. மதில்—அகழி—முதலைகள் என்ற உருவகப் பாங்கில் மேட்டுக் குடியினர், அவருக்கான காவலர், அவரை மிஞ்சிய அரசின் ராணுவம்—என அக்கால்ச் சமூக ஆதிக்க அமைப்பை இக்கவிதையில் காணலாம். இப்படைப்புப் பற்றியே தனியான ஒரு அறிமுக நூல் எழுதலாம். இந்நூலிருந்து சில வரிகள் :

''வீதியில் அலைவோர்—பிச்சைக்காரர்கள்
வீதியில் நிற்போர் நிராதரவானவர்கள்
வீதிக்கு வருவோர் வேலைகளற்றோர்
வீதியில் நடப்போர் யஜமானர் அல்லாதார்
வீதிகளில் பார்க்குகள் அமர்வோர் நல்ல வீடுகளில்லாதார்
வீதியில் உழல்வோர் இழி குலமக்கள்
இழி குல மக்களால் நிறைந்து வழிகிறது வீதி''
(கனவு-மார்ச் 88)

''பொருள் தேடும் சூதாட்டத்தில்
வெற்றி பெற்றோர் மேட்டுக்குடியிலும்
தோல்வியுற்றோர் பள்ளக்குடியிலும்''

''பீதியுடன் ஒருவரை ஒருவர்
நெருக்கி அடித்துக் கொண்டு நிற்கும்
குழந்தைகளைப் பார்த்திருக்கிறீர்களா
அதுதான் பள்ளக்குடி'' (மேலது)

காலங்காலமாக இருந்து வரும் அநீதியின் விளைவான தாழ்த்தப் பட்ட மக்கள் பற்றி இவ்வாறு பல காட்சிகளும் விளக்கங்களும் கொண்டிருக்கும் இப்படைப்பின் அமைப்பு உருவகப் படிமவியலையும் உட்கொண்டுள்ளது.

''உங்களையே உற்று நோக்கிக் கொண்டிருக்கின்றன
முதலைகள்
அலைகளுக்கு நீங்கள் இரையாக மாட்டீர்களா

நர பிணங்கள் எத்தனை விழுந்தும்
நரமாமிசம் ஆசை தணிய வில்லை
உயிருள்ள நரமாமிச மல்லவா வேண்டும்
இதோ இந்த அமைதிதடுமாறி ஒருநாள் நீ
உன் துப்பாக்கியைக் கொண்டு
அகழி முதலைகளைச் சுடக் கூடுமோ?
அல்லது
உன்னை நீயே சுட்டுக் கொள்வாயா?'' (மேலது)

மிக நேர்த்தியான, இயல்பான, ஆழந்த சொல்கட்டுக்களுடனும் உள் வீரியத்துடனும் உருவகப் பாங்கில் காட்சிப் படிமவியலாக அமைந்துள்ள 'அகழி' சமூகநீதிக்கான ஒரு வலுவான படைப்பு எனலாம். அப்துல்ரகுமானிடம் அலங்காரத் தன்மை சற்று தூக்கலாகவே இருந்தாலும் அவரிடமும் உருவகப்பாங்கிலான படிமவியல் மிகுதியாகக் காணப்படும். 'நீதி தேவதை' என்ற கவிதையை இதற்கு நல்ல சான்றாகக் கொள்ளலாம்.

'எங்கள் தோட்டத்துப்
பூக்களிலெல்லாம்
உன் கோயில் வௌவால்களின்
எச்சம்
உள் பிரகாரமெங்கும்
சமுகு முட்டைகள்' (பால் நிலா)

உருவகவியலுடன் கூடிய இக்கவிதையில் சாதீயத்திற் கெதிரான சமூக நீதி நவிற்சிகள் இணைந்துவரும்

உன் கோயிலுக்கு
வெளியே
நெடுங்காலமாக நிற்கும்
நந்தனார்களின் ஆண்களில்
நெருப்புக்குண்டம் தயாராகிறது
போ
அதில் போய் குளித்துக்கொள். (மேலது)

இவ்வாறு சிறப்பாக அமைந்துள்ள கவிதை நீண்டு போகும் போது மிகையான குறிப்புகள் சேர்க்கப்பட்டு செயற்கைத் தன்மை பெற்று விடுவதுண்டு.

'கொலைவாள்
உன்கைக்கு மட்டும்
எப்படி தூரணமாகியது?
ரத்தம்
உன் நகங்களில் மட்டும்
எப்படி
மருதாணி ஆகிறது
ஏ....நீதி தேவதையே
உன் வாள் முதலில்
உன் கண்கட்டை அறுக்கட்டும்'' (மேலது)

இப்பகுதியில், வாசகரின் மனதை உடன் கிளர்ச்சியுறச் செய்வது போன்ற ஒரு அலங்காரத் திறன் புகுந்திருப்பதைக் காணலாம். இப் பகுதியை இங்கே எடுத்துக் காட்டுவதன் நோக்கம், இது போன்ற அலங்காரத்திறன் இன்று சமூக உணர்வுக் கவிதை என்ற பெயரில் நிறைய வந்து கொண்டிருக்கின்றன. பொதுவாகக் கவித்துவப் போக்கை மதிப்பிடும் விமர்சனப் பார்வை வேண்டும். புதுக்கவிதை என்பது செயற்கையான அலங்காரத் திறமையல்ல; அதுவும் கவிதை யாக இருக்க வேண்டும் என்பது அடிப்படையான முதன்மைச் சிறப்பாகும்.

இதுவரை பார்த்த, நடப்பனுபவக் காட்சி ஆக்கங்களின் பல் வேறு வெளியீட்டுத் தோரணைகள் மூலம், சமூகநீதி பற்றிய அலசல் முறையை அடையாளங்கண்டு கொள்கிறோம். நடப்பிய லுடன் சமூக உண்மைகளைக் காட்ட எண்ணும் போது காட்சி. விரிவுநிலை பெறுவதும், பிற நவிற்சிகளில் காட்சியாக்கம் குறைந் திருப்பதும், படிமவியலாகும் போது பட்டறிவுத்திறன் உருவாத லும்—ஆகிய கவித்துவத் தடங்களை அடையாளங் காண்கிறோம். படிமவியல் என்பது நடப்பியல் ஓர்மை பெறும் நிலைகளில் கனவுத் தன்மை குறைந்து, உள்வேகம் பெறுவதை அறிந்து கொள்ள முடி கிறது. இன்றைய சிக்கல் மிகுந்த சூழல்களில், இவ்வாறு காட்சி ஆக்கிக் காட்டும் முனைப்பு மிகுதியாகி, அதுவே ஒரு கவர்ச்சியாக, அதன் வெளிப்பாட்டு நிலையில் மிகையான, அலங்காரத்திறன் ஓங்கி நிற்கும் போக்கும் புதுக்கவிதையூடே கலந்து வருதல் நிகழ்ந்து வருகிறது. மிகை உருக்கம், மிகை அலங்காரம், செயற்கையான திறமை—ஆகிய கூறுகள் கவிதை என்ற பெயரில் மொழிவடிவம் பெறுமானால் அது கவித்துவ வலுவும் கவித்துவ அழகுமற்ற

தாகவே இருக்கும். சிறந்த கவிதைகளை இனம் காண, இத்தகைய இயல்புகளை அறிந்து கொள்ளும் திறனாய்வு முறை தேவை.

திறனாய்வு என்பது, சிறந்த, வலுவான கவித்துவத்தை அடையாளம் காணும் அறிவாக இருப்பது அதன் சிறப்புப் பண்புகளில் அடிப்படையாகும். இதன் அடுத்த நிலைகளிலேயே அதன் சமூக, உளவியல், மற்றும் கருத்தியல் நவிற்சிகள் பற்றிய புரிதல்கள் வேண்டும். இவ்விரண்டாம்நிலையில் திறனாய்வு என்பது ஆராய்ச்சி என்பதன் கூறுகளை உள்ளடக்கிச் செல்லும். எது நல்ல கவிதை அல்லது எது கவிதை அல்ல என்பதைக் கணக்கிலெடுத்துக் கொள்ளாமல் செய்யப்படும் திறனாய்வின் விரிவுகள் அடிப்படை போடப்படாத கட்டுமானங்கள் போன்றவை.

எள்ளல்

அங்கதம் அல்லது எள்ளல் என்பது தமிழ்க் கவிதை மரபில் புதியதல்ல. இரண்டாயிரம் ஆண்டு காலமாக இருந்து வருகிறது. இதற்கு இலக்கணம் கூடக் கூறப் பெற்றுள்ளது. பெரும்பாலும் எள்ளல் என்பது, சமூக அநீதிகளைக் கேலியும் நகையும் தோன்றுமாறு கூறி, அதே வேளை ஒரு கூர்மையான விமர்சனத்தையும் உள்ளே வைத்துச் சொல்வதாகும். காளமேகப் புலவரின் பாடல்கள் எள்ளலுக்குப் புகழ் பெற்றவை. சாதீயம், வறுமை, பெண்ணுரிமை போன்றவை பற்றிய விமர்சனங்களை எள்ளலாகக் கூறும் போது, அது விகடத்துணுக்காக மாறிவிடாமல் இருக்க வேண்டும். ஆழ்ந்த சமூக ஓர்மை கவிதைக்குள் இருக்க வேண்டும். வெறும் சிரிப்புக்குரியதல்ல எள்ளல்.

புனிதம் என்ற மதிப்பு சார்ந்து மக்களிடையே அதிகத் தாக்கம் பெற்றிருக்கும் சமயப் பண்பாட்டை, அதன் போலியை எள்ளிட எண்ணும் ஒரு கவிஞர் இவ்வாறு எழுதுகிறார்.

''ஆச்சாரியாரின் அருளுரை
மண்டபத்துள் நுழைந்தேன்
வௌவாலின் துர்நெடி!
பக்கத்தில் போனேன்
பனியனின் நாற்றம்''.

(பிரம்மா, அக்டோபஸும் நீர்ப்பூவும் ப. 32)

இன்றைய சமூகம் எந்த நீதியுமற்றுத் தலைகீழாக மாறி நடக்கிறது என்பதை எள்ளல் குறிப்புடன் அப்துல் ரகுமானும்

எழுதியுள்ளார். பாற்கடலரங்கம், ஐந்தாண்டுக் கொருமுறை ஆகிய கவிதைகளில் இதனைக் காணலாம்.

''கையில் மாலையுடன்
குருட்டுத் தமயந்தி''

போலி நளன்களின் முன் வரும் காட்சி மூலம், சமூக அவலத்தை எள்ளல் செய்கிறார், சகுமான்.

எள்ளல் கவிதைகளில் புகழ் பெற்ற மீராவின் 'ஊசிகள்' தொகுதியில் சமூக அநீதிபற்றிய எள்ளல்களும் இடம் பெற்றுள்ளன. சமூகத்தைச் சுரண்டிப் பிழைக்கும் அமைச்சர்களை இவ்வாறு எள்ளுகிறார் :

''ஆராவதமுதன்
அமைச்சர் பதவியை
இழந்து வருந்தி
இருந்த ஓர் இரவில்
அருகில் தூங்கிய
ஆசை மனைவியை
சும்மா சும்மா
சுரண்டலானார்
அம்மா கேட்டார் ஆத்திரத்தில்

''ஏன் தான் உங்களுக்கு
இன்னும் அந்தப்
பொல்லாப் பழக்கம்
போக வில்லையோ'' (ஊசிகள். ப. 17)

சாதிய உணர்வு தமிழ் மக்களிடையே நிறைந்திருக்கும் தன்மை பற்றி ஒரு கவிதையில் கேலி செய்கிறார் நயமாக.

''உனக்கும் எனக்கும்
ஒரே ஊர்
வாசுதேவ நல்லூர்
நீயும் நானும்
ஒரே மதம்
திருநெல்வேலிச்
சைவப் பிள்ளைமார்
வகுப்புங்கூட

உன்றன் தந்தையும்
என்றன் தந்தையும்
சொந்தக்காரர்கள்
மைத்துனன்மார்கள்
எனவே
செம்புலப் பெயல் நீர் போல
அன்புடை நெஞ்சம் தாம் கலந்தனவே
(மேலது பக். 46)

சாதி, மதக் கட்டுக்களை மீறியதாகச் சங்கக் கவிதையில் காட்டப் பெறும் காதல், இன்று, சாதி, சொந்தம் பார்த்து உருவாகும் நடப் புண்மையை இக் கவிதை காட்டி எள்ளல் செய்கிறது. புரட்சி வாதிகள் சமூக நீதிக்காகப் போராடும் நிலையில், அவர்களை ஒடுக்கிட, செல்வர்கள் நினைக்கின்றனர். செல்வர்களின் மன நிலையை இவ்வாறு எள்ளுகிறார் மீரா :

''ஓ!ஓ! செல்வம் :
உடைய பெரியீர்
உங்களால் தாம்
பாரி ஆக
முடியவில்லையே
அதுகளேனும்
நக்ஸல்
பாரி ஆகி
போனால் என்ன?
புழுங்கி ஏன் நீர்
பொறாமைப் படுகிறீர்'' (மேலது பக். 21)

சமூக அநீதியின் பல்வேறு காட்சிகளை, இவ்வாறு எள்ளிநகையாடி, அதே சமயம் ஒரு நியாய உணர்வு ஊடோடுமாறும், மீரா, தன் கவிதைகளை ஆக்கியுள்ளார்.

எள்ளல் வெளிப்பாட்டில், அடுத்து, குறிப்பிடத்தக்கவர் தேவ மகள் ஆவார். ஆண்களின் நீதி எழுச்சியின்மையைப் புராணத்துடன் காட்டி எள்ளுகிறார்.

''அன்று
குருக்ஷேத்திரத் தேர்த்தட்டில்
காண்டீபம்கை சோர்ந்தவனுக்கு
அருளிய கண்ணன்

இன்றைய
அருச்சுனர்கள் கையில்
காண்டீபம் திணிக்க
என்று வருவான்?" (முரண். பக். 36)

இந்திய மக்களாட்சியில் வறுமையை அகற்ற முடியாமல் பங்கீட்டு நீதியை இழந்ததனாலும் இந்திய ஒருமைப்பாட்டை வலியுறுத்தும் ஒரு கவிதை :

"வறுமையை வெளியேறச் சொல்வோம்
பசுமைப் புரட்சியைக் கூப்பிடுவோம்
இந்தியனாக இருப்போம்
இந்தியப் பொருள் வாங்குவோம்
வீட்டுக்கு ஒரு மரம் வளர்ப்போம்
ஜனநாயகத்தைத் தொங்கவிட" (மேலது பக். 79)

தேவமகளின் கவிதை மொழியில் எள்ளல் மென்மையாகவும் உள்ளாற்றலோடும் இழையோடுவதை உணரலாம்.

இந்த எள்ளல் முறையில், சற்று வேறுபட்ட தன்மையில் நகைப்பா (Parody) போல சமூக அநீதியை விமர்சிக்கும் பண்பினையும் இருபதாம் நூற்றாண்டுக் கவிதைகளில் காணலாம். த. கோவேந்தனின் 'புதுநானூறு' என்ற கவிதைத் தொகுப்பு முழுவதும், சங்க இலக்கியம் போல அமைந்த நகைப்பா. பல்வேறு சமூக நிலைகளைக் காட்டும் இத்தொகுதியில் சமூக அநீதி பற்றிய பாடல்களும் உள்ளன. சில சான்றுகளைக் காணலாம். இன்றைய குடியாட்சிஅரசமைப்பு எவ்வாறு சுரண்டல் அமைப்பாகவும் திருடர் தொழிலாகவும் இருக்கிறது என்பதைக் கீழ்க்கண்டவாறு கூறுகிறார்

"வயதினை வைத்தே வாக்குப் பெறுவதால்
கொள்கை இல்லாமல் கட்சிகள் கூடலால்
தேர்தல் என்பது திருடர் கூட்டுறவால்
ஆட்சி அமைப்பது மாட்சிமை ஆனதே
ஆள்வோர்
வல்லந்தத்தால் சுரண்டிக் கொழுக்கிறார்
சமயச் சழக்கரோ,
அச்சம் ஊட்டியே சுரண்டிக் கொழுக்கிறார்.
இருவரும் கொழுப்பது தெருப்பன்றி போல்
மக்கள்

முதுகில் ஒருவனும் மூளையில் ஒருவனும்
ஒட்டுண்ணியாகவும் புல்லுருவியாகவும்
கொட்டம் அடிக்கிறார் குடியாட்சி இதுவே
(புதுநானூறு, பக். 23)

த. கோவேந்தன் கவிதைகள் நகைப்பா போல இருந்தாலும், சொல்லாட்சியில் இயற்கையான தன்மை குறைவாகவே இருப்பதை உணர்ந்து கொள்ளலாம்.

**சிதைவியல்**

சமூகநீதி என்ற உணர்வோட்டத்தில், அநீதிகள் பற்றிய எதிர்ப்புக்குரலைக் கூவலாக வெளிப்படுத்துதல், கற்பிதமாக நீதிபற்றிய ஒரு கனவுரு படைத்தல், நடப்பனுபவ நிலையில் பல்வேறு உத்திகளில் அநீதிக் காட்சிகளைக் காட்டல், எள்ளி நகையாடல்—போன்ற நவிற்சி நிலைகள் பற்றிய சிறிய அறிமுகம் இதுவரை விளக்கித் தரப்பெற்றுள்ளது. இவற்றின் உள்ளடக்கங்கள் யாவற்றையுமே பொதுஉடைமை, சமத்துவம், சாதி ஒழிப்பு, பெண்ணுரிமை, ஆதிக்க எதிர்ப்பு, விடுதலை-ஆகிய சில உள்ளடக்கப் பிரிவுகளுக்குள் அடக்கி விடலாம். இத்தகைய கவிதைகள் மூலம் சமூகஅமைப்பின் பொதுவான, பொருளாதார, குடும்ப அமைப்பு வழியான சிக்கல்களை விளங்கிக் கொள்ளலாம். மேலும், இவை காலங்காலமாகத் தொடர்ந்து இருந்து வருவன. இருபதாம் நூற்றாண்டில் இவை பெருவலி பெறுகின்றன.

ஆனால், இருபதாம் நூற்றாண்டுக்கே உரிய இன்னொரு முக்கியச் சமூகச் சீரழிவு. மனிதன் எல்லாவற்றிலிருந்தும் அந்நியமாகி, யந்திரமாகி, உள் சிதைந்து பொருண்மை இழந்து தவிக்கும் நிலைதான். விடுதலை, குடியாட்சி, அறிவியல் வளர்ச்சி, போக்குவரத்து, தகவல் தொடர்பு, நகரமயமாக்கல், அலுவல் சட்டங்கள், கெடு பிடிகள், கட்சிகள்—எனப் பல்வேறு, பின்புலங்களில் தனிமனிதனின் சிக்கல் கொடுமையானதாகிறது. ஒருபுறம் பொருளாதார, சாதீய ஆதிக்கமும், நம்பிக்கையற்ற உணர்வோட்டங்களை உருவாக்குகின்றன. சாதி, மதம், தனியுடைமை என்றெல்லாம் இனங்காட்டி எதிர்ப்பது என்ற நிலையினின்றும், சற்று, விலகி நின்று பார்க்கக்கூடிய புதிய சமூக நிகழ்முறைகள் மனிதனைச் சிதைக்கும் சக்திகளாக உள்ளன. இவையும் மனிதனின் ஆதிக்க உணர்வினால் ஏற்படும் சிதைவு நிலைகளே. சமூகநீதி என்பது, அடையாளமற்றுச்

செத்துபோன காட்சிகளாக, நம்பிக்கையின்மைப் படிமங்களாகக் காட்சி அளிக்கும் இந்நிலைபற்றியும் தமிழில் கவிதைகள் தோன்றி யுள்ளன. இத்தகைய புதிய வாழ்வியல் கவிதைகள் யாவும் யாப்புக் கட்டற்ற கவிதைகளிலேயே மிக்க வலுவுடன் வெளிப்பட்டுள்ளன.

மேலும் இத்தகைய கவிதைகள் தனிமனிதனின் தன் விருப்ப வாழ்வுக்கோ அல்லது ஆன்ம அனுபவங்களுக்கோ எதிரானதாகச் சமூகச் சூழலைக்காட்டுவன. புதியசனநாயகச் சமூகநீதிபரவி நிற்கும் இந்நாளில், இத்தகைய கவிதைகளும் புதிய சூழலுக்கேற்ப சமூக அநீதியின் கூறுகளைக் காட்டுவன என்று கொள்ளலாம். தருமு அருப்சிவராமின் 'மேல் நோக்கிய பயணம்' என்ற நூல் புதிய காலச் சூழலில் எவ்வாறு ஓர் புதிய ஆதிக்க சக்தி வெறும் உலகியல் மூர்க்க மாக மாறி, தனிமனிதனின் விடுதலை - ஆன்மிக உணர்வுக்குத் தடையாக இருக்கிறது என்று காட்டுகிறார். சமுதாய மாற்றத் திற்கும் நீதிக்குமாகத் தோன்றிய எதிர்ப்பியக்கமான திராவிட இயக்கம், காலப்போக்கில் அரசியலாகக் கிளைத்து வளர்ந்துவிட்ட பின்னணியில், சாதியமோ சமயமோ மாறாமல், பண ஆதிக்க சக்தியாகமாறி. தனி மனிதரைச் சூழ்ந்து அமிழவைப்பதாகக் காட்டுகிறார் சிவராம்.

"பிள்ளையார் கோவிலில்
பிள்ளையாராக
புரட்சித்தத்துவ
சித்தாந்தியின் சிலை
கோபுரமீது
ஓர் ஆயிரம்
நாயன்மார்களின்
வண்ணச்சுதைகள்
ஒருவர் தோளிலே
வெண்ணிறப்பூணூல்
மீதிப்பேர் தோள்களில்
கறுப்பு நூல் சிவப்பு நூல்
கலந்த புதுநூல்
அறுபத்து மூவர்
ஆயிரவரானது
எப்படி என்றேன்.
ஒவ்வொரு சுதையும்

ஒவ்வொரு ஜாதி
.................
.................
ஜாதியை விடாத
மாபெரும் புரட்சி
ஆயிரத்து ஒண்ணா நீ?
ஆபீஸில் போய்
ஆளைக் கேட்டு
கோபுரத்தில்
ஏறிப்பார் என்றார்
கறுப்பு நூல் சிவப்பு நூல்
கலந்த புது நூல்
அணிந்த ஒருவர்.
உன் ஜாதி என்ன என்று
என்னைச் சூழ்ந்து
கேட்டது ஒரு கும்பல்

(மேல் நோக்கிய பயணம் பக். 23-24)

தனிமனிதச் சுதந்திரத்திற்கெதிரான இந்தப் புதிய ஆதிக்கச் சூழலைத் தரும அருப்சிவராம் விமர்சனப் பாங்கில் காட்டுகிறார். இங்கும் காட்சிகள் இருந்தாலும் இதுபோன்ற கவிதைகளின் தனித் தன்மை, புதிய மாறுதல் சூழலில் ஏற்படும் நம்பிக்கைச் சிதைவே யாகும்.

சி. மணி என்ற கவிஞர் நவீன நகரப்பண்பாட்டு நடத்தைப் பின்னணியில் நிகழும் போலிவாழ்வை - வாழ்வின் சிதைவைக் காட்டுகிறார். அவரது 'நகரம்' என்ற நீண்ட கவிதை முழுதும் இதையே விளக்குகிறது.

''தமிழகம் கீழுமல்ல
முழுவதும் மேலுமல்ல
உலையேற்றி விட்டுச்
சோறாக்க மறியல்
பட்டினியும் அழிவுமே
கிடைத்த பயன்...
பின்னாலும் போகவில்லை
முன்னாலும் நடக்கவில்லை
நடுக்கிணற்றில் நிகழ்காலம்

தாழிட்ட மரபு
தாழிட்ட துணிவு
சிக்கலை வெட்டக்
கை கொடுக்க மறுக்க
செய்வதென்ன?
..................
பனி வெடிப்பு சிதைந்த
இதழாகப் பிளவிட்டு
மண்பொரிந்து மிகஇடிந்த
சுவரின்மேல் சல்லடையைக்
கவிழ்த்த ஒரு வீடதனில்
தரை என்ற புதை குழியில்
இடைவரை அமிழ்ந்துவிட்டேன்.
கேட்கின்றேன் என் விமானம்
கிளம்பும் இரைச்சல்
கேட்டும் பயனில்லை,
தப்பிக்க முயல முயல
மேலும் ஆழ்கின்றேன்..." (நரகம் பக் 9, 30-31)

சி.மணி, இன்னொரு கவிதையில் ஒன்றுஞ்செய்யமுடியா இயலாமை உணர்வை 'அறை' என்ற படிம வழிக்காட்டுகிறார்.

"தப்பிவிட்டேன் என்று விழித்தேன்
சுற்றுமுற்றும் பார்த்தேன். மேலே
வானம். நான்கு பக்கமும் பூவிருள்
கூரை, சுவர்கள் எதுவும் இல்லை
எல்லாப் பக்கமும் வழிகள் தெரிந்தன.
வெட்ட வெளிதான் இது அறை அல்ல
என்று சில கணம் துள்ளியது என் மனம்
மேற்கே நடந்தேன் இடித்தது ஒரு சுவர்
தெற்கே நடந்தேன் இடித்தது ஒரு சுவர்
வடக்கே நடந்தேன் இடித்தது ஒரு சுவர்
கிழக்கே நடந்தேன் இடித்தது ஒரு சுவர்
எழும்பிக் குதித்தேன் இடித்தது கூரை" (மேலது)

இனி, தனிமனிதன் சோக அழுத்தங்களைச் சொல்வதில், ஒரு தீவிர மான நெருக்கத்தினை, கல்யாண்ஜியின் இரண்டு கவிதைகளில் காணலாம்.

"கைகளையும் முதுகையும்
சுமக்கிற உறுப்பாகப்
பழக்கின
உடம்பின்
தலைக்கு மேல் ஒரு
புதிய உறுப்பாக
முளைக்க தொடக்கும்
வாழ்வின் சுமைகள்
வேண்டாம்
உறுப்புகள் புதிதாய்
போதும்
கைகள் எதற்கும் (சலனம் ப. 19)

வாழ்க்கையிலிருந்து அந்நியமாகிப் போகும் சமூகக் கொடுமையை, இக்கவிதையின் தனிமனிதன் துயர் வழி அறியமுடிகிறது. வாழ்க்கையின் கொடிய அருவருப்பும் ஒரு கவிதையில் வெளியாகிறது.

"சுவருக்குள்
எப்போதும் புழுக்கம்
அழுக்குத்
தொங்கல்
கசங்கிக் கொடியெங்கும்
ஜன்னலின்
இடுக்குவழி ஒழுகும்
வெளிச்சத்தில்
விகாரப்படும் | ரூபப்படும்
உள்ரூபங்கள் | உள்விகாரங்கள்
கதவுக்கு
வெளிவந்தால் இருக்கிறது
காற்று
சகமனிதன் மூச்சில்" (மேலது பக். 20)

இவ்வாறு அருவருப்பும், அந்நியமான நிலையும் வாழ்வுச் சிதைவுக் கூறுகளாகக் கவிதையில் வெளிப்படுகின்றன. இது கால மாறுதலின் புதிய கவிதை என்பதை:

"பூக்களைப்பாடும்காலம்
போனது நேற்றின் முன்னம்

அழுக்கினைப் பாடும் காலம்
நம்முடை கையில் ஏறும்'' (மேலது. பக். 48)

என்று சுட்டிக் கூறுவார் மாலன்.

''சர்வ சுபங்களுக்கும் மூலாதாரமான தேசபக்தி என்ற நவீன மார்க்கம்'' என்று பாரதிகூறி, விடுதலைக்காக எழுதினான்; இயங்கினான். ஆனால் விடுதலை கிடைத்த பின் நிலை வேறாகிவிட்டது. ''மனிதன், வாழ்வின் மிக இயல்பான நிலைகளில் கூட உட்கார முடியாமல், வாழ்வை, மிகஅந்நியமாக்கிக் கொண்டிருக்கிறது இந்த நூற்றாண்டு. வீட்டின் ஓரங்களில் கட்டியிருக்கும் நாயைப் பழக்குவது போல, யாவற்றையும் பழக்கப் படுத்திக் கொள்ள—கொண்டு, தன் தனித்துவத்தை இழந்து நிற்கும் இந்தச் சமூகம் அளித்து இருக்கும் விடுதலைமாயை .....'' என, அப்பாஸ் நாம் பெற்ற விடுதலை வாழ்வை விமர்சிக்கிறார். ஏன்? எல்லாம், ஏதோ ஒரு மூர்க்கத்தில், தன் போக்கில், எதிர் எதிராய் இயங்கிக் கொண்டிருப்பதாக ஒரு கவிதையில் அவர் காட்டுகிறார்!

''சிகப்பு பச்சை என
ஆட்ட அணிகளை நிறம் பிரித்துக் கொண்டார்கள்.
ஒவ்வொருவரும் உள்ளுக்குள்
ஒரு நிறத்தின் பின்னால் சாய்ந்து கொண்டு
ஆட்டத்தைத் தன்பக்கம் அழைத்து
கோஷிக்க,
யாருக்கும் பிடிபடாத ஆட்டம்
மைதானமெங்கும் தன் போக்கில்
நடனமிட்டுக் கொண்டிருக்கிறது. (வரைபடம் மீறி பக். 36)

இத்தகைய ஆட்டம் அச்சத்தைத் தோற்றுவித்து வருகிறது. ஆயினும் இயற்கை நீதியோ ஆழ்ந்த வலிமை கொண்டது எனக் கூறுகிறார் இன்னொரு கவிதையில்.

''அதிர்ந்து நகருகிறது
எனது டிராக்டர்
பூமியைத் துளையிட்டுக்கொண்டு
பயத்தில் இறகுயர்த்துப் பறந்தன
பறவைகள்,

அமைதி கலைக்காத வேரோ
சப்தமற்றுத் துளை போட்டுக் கொண்டிருக்கிறது
பூமியை (மேலது பக். 37)

இன்றைய வன்முறையும் அரசு பயங்கரவாதமும் இணைந்து நம்பிக்கையின்மையைச் சமூகத்தில் உருவாக்கும் நிலை பற்றி, ஆத்மாநாம் ஒரு கவிதையில் புராண உருக்கள் மூலம் சுட்டிக்காட்டு கிறார், மிக எளிமையாக.

''இந்த நகரத்தை எரிப்பது
மிகச்சுலபம்
ஒரு தீப்பெட்டி போதும்
தீப்பெட்டி விலை மிக மலிவு
ரொட்டியின் விலையைவிட மிகமிக
ஒரு லிட்டர் கிரசினும் வேண்டும்
அதுவும் கிடைக்கும்
அரசின் சீரிய விநியோகிப்பில்...
ஓசைகள் குறைந்த நள்ளிரவில்
எங்கேனும் துவங்கலாம்
துணிவுள்ளவன் விழித்திருந்து
அனுமான் எரித்தான் இலங்கையை
வாலில் தீ வைத்த போது
வானைத் தொட்ட தீ தணிந்தது
எழுந்தது புது லங்கை
அழிந்தானா ராவணன்
போராடினான் நாட்கணக்கில்
மடிந்தான் குருதி வெள்ளத்தில்
இன்றும்
அனுமான்கள் உண்டு வாலின்றி
ராவணர்களும் உண்டு
தீயுண்டு நகரங்கள் உண்டு
தனியொருவன் எரித்தால் வன்முறை
அரசாங்கம் எரித்தால் போர்முறை''
(ஆத்மாநாம் கவிதைகள் பக். 69)

கிராமத்துச் சூழலும் இன்று எவ்வாறு மனிதர்களை அடையாள மற்றவர்களாக்கி, விஷத்தன்மை பெற்று விட்டது என்பதை ஆத்ம நாம் 'காலம்' என்ற கவிதையில் நுட்பமான அனுபவச் சேர்க்கை களுடன் எழுதியுள்ளார்.

''என் கால்கள் நடந்த தெரு
ஒரு பரத்தையாய் மாறிவிட்டது.
குச்சு வீடுகள்
செங்கற்களை ஒளித்துக்கொண்டு
சுண்ணாம்பில் மினுக்குகின்றன.
மறைக்கும் கோவணச் சுவர்கள்
உரத்து அழைப்பை விடுக்கின்றன.
பேடித்தலைவர்கள்
பிறந்தநாள் மாலை, கிரீடம்
புன்சிரிப்புடன்
மக்களை ஏளனம் செய்கின்றனர்.
போலி உலகப் படங்களின்
விளம்பரங்களோடு
கட்டி விரலை முட்டி. ரத்தம் கசிய
முத்தம் கொடுத்த கற்கள்
மண்ணுக்குள் மறைந்து விட்டன.
நான்
நடந்த தெருமண்
இன்று
எனக்கு முன்னும் பின்னும்
பிறந்த மனித விலங்குகள்
வாகனங்களால் அரைபட்டு
முகப்பூச்சு சுண்ணாம்பென
மிருதுவாய் மாறிவிட்டது.
தெருவில் மனிதர் கால்களை
மட்டும் அடுக்கி நான் நடக்கிறேன்
விஷக்காற்றை உறிஞ்சிக்கொண்டு'' (மேலது பக். 99)

கிராமத்தின் அமைதிச் சிதைவுக்குக் காரணமான சக்திகளையும், சிதைவுத் தோற்றங்களையும் காட்டி இறுதியில் அதன் காற்றில் நஞ்சு கலந்து வருவதையும் ஆத்மாநாம் சித்தரித்துக் காட்டுகிறார். நகர வாழ்வியலில் காணப்படும் அந்நியத்தன்மையும் அடையாள மின்மையும் சி. மணியிடம் வெளிப்படுவது போல, கிராமவாழ்வியல் பின்னணியில், அவை, ஆத்மாநாம் கவிதையில் வெளிப்பட்டுள்ளன.

இன்றைய வாழ்வியலில் அந்நியமாகும் தன்மை தொழிற் புரட்சியினால் ஏற்பட்டதாகப் பார்க்கிறார் இந்திரன். மனிதன் யந்திரமாகிப் போனான்; அதாவது, மனிதனை யந்திரமாக்கி

விட்டது புதிய பொருளாதாரச் சமூகஅமைப்பு. இதனை இந்திரன் இந்த விதமாகக் காட்டுகிறார் :

"நேரத்தைத் துண்டுபோட முயன்றதில்லை
காக்கைகள்
ஆனால் அதில் குளிப்பதுண்டு
மணிக்கூண்டுகள்
கர்வமாய் ஒலியெழுப்பி
ஓடும்நதியில் அணைபோடமுயன்று
அன்றாடம் தோற்கும்
மணல் கடிகாரங்களோ
சப்திப்பதில்லை.

தொழிற்புரட்சி
நேரத்தை முணுமுணுக்கச் செய்துவிட்டது.
தாங்கள் நேரத்தை
யார்யாருக்கோ விற்றுவிடுபவர்களின்
கைகளிலோ
கைக்கடிகாரங்கள்
விடுமுறைகூட எடுக்கமுடியாதவர்களின்
வீடுகளில்
ஏனோ தொங்குகின்றன
நாட்காட்டிகள்
"மணி என்ன சார்"
என்று கேட்டும் அவனுக்கு
நேரம்கூடச் சொந்தமில்லை
...................................
காக்கைக்கு?" (முப்பட்டை நகரம் பக். 18)

தற்கால வாழ்க்கை பொருளற்று, ஒளியற்று, உணர்வற்றுப் போன நிலையை 'நகரத்தில் இரவு' என்ற கவிதையில் இந்திரன் இவ்வாறு சித்திரிக்கிறார் :

"அடுக்குமாடிகளில் வாழ்பவர்கள்
சூரியனை
கான்கிரீட்டில் புதைத்தாயிற்று.

சேரிக்குடிசைகளுக்குப் பக்கத்தில்
சாக்கடை நீரில்
விழுந்தது நிலா.

சோடியம் விளக்குகளின்
மஞ்சளில் நனைந்த மனிதர்கள்
தொலைக்காட்சிப் பெட்டி முன்னால்
மரத்துப்போனார்கள்......" (மேலது பக். 19)

இன்றைய புதிய வாழ்வியல் பின்னணியில் மேலோங்கி உள்ள அந்நியமானநிலை, அடையாளமற்றநிலை, உணர்வற்றநிலை, — யாவும் சிதைவுநிலைகள்தாம். இச்சிதைவியலானது, புதிய தொழிலியம் அறிவியலின் வியக்கத்தக்க வளர்ச்சியுடன், நுகர்ச்சிக்குள் மனிதனை அடிமைப்படுத்தும், ஆதிக்கத்திற்குள் இடுக்கி வைக்கும் சமூகநிகழ்வால் உருவானது. ஒட்டுமொத்தமான சமூகவாழ்வையே பலியிட்டு, தனிநபர்களைச்சிதைக்கும் இந்த நிகழ்வு, பொதுச்சமூக அநீதியின் வடிவமே ஆகும். இதன் பல்வேறு நிலைகளை எழுதும் கவிதைகள் இன்று தமிழில் நிறைய தோன்றியுள்ளன. குறிப்பிடத்தக்க ஒரு சில சான்றுகளே மேலே எடுத்துக் காட்டப்பெற்றுள்ளன. மற்றும் சில கவிதை வரிகள் கீழே தரப்பெற்றுள்ளன.

இன்றைய பணமதிப்புக் காலத்தின் கொடிய விளைவு

சிமிண்டைத் தின்று
வீடுகளாய் மாறும்மனிதர்
பீதியுறுங்காலம்
கலப்பையில் விதைத்தால்
கலப்பையே முளைக்குங்காலம்
(பிரம்மராஜன், முன்றில்-4)

உணர்வற்ற இருப்பு நிலை

பழைய உலகில் ஒரு இடத்தில்
சலனமற்றிருக்க முயலும் நானும்
கொடியில் ஒற்றைப்பூ
வெகுநேரம் ஆடிக்கொண்டிருந்தது.
பாறாங்கல்லின் பழுவிருந்தது அதன் அசைவில்
கால்மாற்றியிருந்தேன் (கனகதாரா, முன்றில்-2)

தற்கால வாழ்வியலின் போலி—செயற்கைத் தன்மை

உன்சௌந்தர்யத்தையும் இளம் பெண்களின்
பொன்னிறக்கால்களின் வனப்பையும்கண்டு
அயர்ந்து போனேன் முதலில்
நீலநிற நியான்கள் சோடியம் விளக்குகள்
மிளிரும் வண்ணப் புன்னகையின் பொய்

இரும்புங்கல்லும் தசைகளாகக் கொண்டு
புயலையும் முறியடிக்கும் கம்பீரக்கட்டடங்கள்
இவற்றைப்பார்த்து குழப்பம்
நாட்கள் செல்லச்செல்ல
சூழ்ந்தது ஏக்கம்.
சலிக்கிறது ஆற்றுநீரும் பச்சைவயல்களும்
இழந்த வாழ்க்கை.
வியர்வையும வாசனையுமற்ற மார்பகங்கள்
தாய்முலைகள் இங்கில்லை
மென்மையான வார்த்தைகளுக்குப் பஞ்சம்
இயற்கை உதடுகள் யாருக்குமில்லை
அறிவின் தீனி
அரிது காண்பது புத்தகங்கள்
இரவுகள் நீண்டு தூக்கமற்றுக்கழிகின்றன.
மினுக்கும் விளககுகளும் அமைதியைக்கிழிக்கும்
கார் ஓலங்கள் நம்மைத் துன்புறுத்தும்
விஞ்ஞான அடிமைகள் நாம சலிப்பதில்லை
(சத்யன், மீட்சி-12)

அந்நியமாகிப் போதல்

எண்கள் துரத்தின
லெட்ஜர் புக்கை அகலவிரித்து
நடுவில் கிடத்தி
அறைந்தன எண்கள்
வயிற்றில் குமட்டிக்கொண்டு
எண்கள் தெறித்தன
வலைபோல் மஞ்சள்பச்சை சிகப்பு
வவுச்சர் காகிதங்கள் சூழ்ந்தன
முகத்தின் நரம்புகளில், நெற்றியோரத்தில்
கண் அடியில் எண்கள் கிறி குருதிவடிந்தது
பழுப்புக்காகிதங்களில் எனது
சவப்பெட்டி செய்யப்பட்டிருந்தது.
எண்கள் நிரம்பியது; ஒன்றிரண்டு
உச்சரித்துத் தேய்ந்த ஆங்கில வார்த்தைகளும்
கலைஞன் செத்துக் கிடந்தான்
கணக்கு டேலி ஆனதாய்
எண்கள் கும்மாளமிட்டன (ஜெ.டி.; மு. 27)

வாழ்வியல் வெறுமை

"கோடைவறட்சி
நாய் பசுவாகி மோர்விலைபோகும்
நாளிதை எண்ணி
வறட்சியுற்ற மண்பிரதேசம்
நீருற்றென்பது இன்று பொறியியலன்றோ?
(எஸ். வைத்யநாதன், மு-25)

தன் அடையாளச்சிக்கல்

"அதனதனுக்குரிய
அதனதனுக்கென்றே
முகங்களுடன்
கிளைத்தன முகங்களில்" (மனோன்மணி, மீட்சி-20)

இன்றைய சிற்றிதழ்களும் அவற்றில் எழுதுகின்ற கவிஞர்களின் தனிக் கவிதைகளும், பெரும்பாலும், இன்றைய பணமதிப்புச்சமூக அமைப்பு தனக்கேற்றவாறு ஏற்படுத்தி வைத்திருக்கும் வஞ்சனை சார்ந்த அநீதிச்சக்திகளின் விளைவால் ஏற்படும் மனிதத்துவச் சிதைவுகளையே வெளிப்படுத்துகின்றன எனலாம்.

# முடிவுரை

இருபதாம் நூற்றாண்டுக் கவிதைகளில் சமூகநீதிக் கருத்துக்கள் எவ்வாறு இடம்பெற்றுள்ளன என்பது பற்றிய ஒரு சுருக்கமான அறிமுகக்குறிப்பாக, இதுவரை. சில கருத்துக்கள் எடுத்துக்காட்டப் பெற்றன. சமூகம்—நீதி—தனிமனிதன்—கவிஞன்—கவிதை என்ற தொடர்புநிலைகளில், கவிதைக் கருத்துக்களுக்கான மூலநிலை, கவிதைக் கருத்துக்களுக்கான பதிவுநிலை, வெளியீட்டியல்புநிலை—ஆகிய சிறப்புக்கூறுகளை ஒன்று சேர்த்துப் பார்ப்பதே கவிதைக் கோட்பாட்டுப் பார்வையாகும். வெறுமனே கருத்துக்களை மட்டும் எடுத்துக்கூறுவது கவிதைக்கலை பற்றிய ஆராய்ச்சியில் குறையுடையதாகவே இருக்கும். இக்குறையைத்தவிர்க்கும் முயற்சியாக, இந்த ஆய்வுரையில் கவிதைத் தடங்கள்பற்றிய அறிமுகக் குறிப்புக்கள் தரப்பெற்றுள்ளன.

சமூகநீதி—அநீதிக்கூறுகள், சமூக வாழ்வில் இடம் பெற்றிருப்பதற்கான காரணம், சமூகம் எந்த நோக்கில் கட்டமைக்கப்படுகிறது, எவ்வாறு கட்டமைக்கப்படுகிறது என்பதைப் பொறுத்தே இருக்கும். இதனை விளக்கும்நோக்கில் சமூகத்தின் பொருளுற்பத்தி நோக்கமும் அதற்கேற்ற வேலைப்பிரிவினைகளும் சமூக உறவுகளும் அமையும் பாங்குகள் இக்கட்டுரையில் முதற்பகுதியில் எடுத்துக்காட்டப்பெற்றுள்ளன. இந்த வகையில் இந்தியாவின் சாதீயம், மதம், குடும்பம், கிராம அமைப்பு போன்ற சமூகநிறுவனங்களும் காலங்காலமாக அமைக்கப்பெற்றுள்ளன. இவற்றினை ஒட்டிய வாழ்க்கை மதிப்புகளே (values) இந்தியப்பண்பாடாக இந்திய—தமிழ்ச் சமூகத்தில் வேரூன்றிக்கிடக்கின்றன. ஆங்கிலேயர் இந்தியாவிற்குக் கொணர்ந்த தொழிலிய முதலாளித்துவம், ஓரளவு, பழைய

மதிப்புகள் பற்றிய விமர்சனத்துக்கு வழிவிட்டாலும், முற்றிலும் பழைய மதிப்பு சார்ந்த நடத்தைகள் செல்வாக்கிழந்து போய்விடவில்லை.

உடனடிப்பணம் அடிப்படையாகக் கொண்ட புதிய பொருளாதாரச் சக்தியால், பணமதிப்பு என்பதே சமூகசக்தியாக மாறிவிட்ட நிலையில், இதற்கேற்ப உருவான புதிய நடத்தைகளுடன் பழைய மதிப்பு நடத்தைகளும் மோதிக்கலங்கின. பழைய அநீதிப்போக்குகளுடன் இணைந்தும் இணையாமலும் புதிய சமூக அதிகார—அரசு அநீதிகள் பரவலாயின. சாதீய ஏற்றத் தாழ்வு, பொருளாதார ஏற்றத்தாழ்வு, பெண்ணடிமை ஆகியவற்றுடன் பண உடைமைக்கான பல்வேறு சமூகச் சக்திகளால் மனிதன் முற்றிலும் தன் உழைப்பிலிருந்து, தன் உணர்விலிருந்து அந்நியப்பட்டுவிடும் நிலை ஏற்படுகிறது. புதிய கல்வி, அறிவியல், நகரவாழ்வியல், ஆகியன மனிதத்துவ ஆளுமையைச் சிதைக்கும் சக்திகளாக மாறிச் செயல்படத் தொடங்குகின்றன. இத்தகைய இருபதாம் நூற்றாண்டுச் சமூக அதிகார அமைப்புபற்றிய சிறு விளக்கமே இரண்டாவது பகுதியில் தரப்பெற்றுள்ளது.

இவ்வாறு பழமையின் தொடர்ச்சியாகவும் கூடுதலான கூறுகளாகவும் உள்ள சமூகப்போக்குகளில் பழைய அநீதிகளும் புதிய அநீதிகளும் இணைந்தே காணப்படுகின்றன. இந்நிலையில், இத்தகைய காலங்காலமான சமூகச் சூழல்களில், கவிதைப்படைப்பாளியின் சமூக நீதிக்கான வேட்கையும் குரலும்கூடக் காலங்காலமாக ஒலிக்கத் தொடங்கிவிட்டது.

சமூகநீதிக்கானகுரல் புதியதல்ல; பழையதடங்களின் தொடர்ச்சியே. எனவேதான், தமிழ்ச்சமூகப் பின்னணி பற்றிய விளக்கமும், இப்பின்னணியில் தோன்றிய சமூக அநீதிக் கவிதைத் தடங்களும், இந்த ஆய்வுரையின் அறிமுகப்பகுதியில் விரிவாக விளக்கப்பெற்றுள்ளன. பழைய கவிதைத் தடங்களில் ஆழ்ந்த தத்துவார்த்தவலு இருப்பது குறிப்பிடத்தக்கது. சமயம், தத்துவம் என்பது அநீதியை மறைக்கும் ஒரு போர்வைபோல செயல்பட்டுவந்ததால், சமய, தத்துவ அடிப்படையிலேயே, அநீதிக்குரல்கள் முடமோசியார், அப்பர், கம்பர் போன்ற கவிஞர்களிடம் வெளிப்பட்டன. சித்தர்களிடம் மிகநுட்பமாக, கூர்மையான, எள்ளல் உட்பொதிந்த சொல்லம்புகளாக வெளிப்பட்டுள்ளன. இத்தகை தத்துவார்த்தக் கூர்சொல் நீதிக்குரல் இன்றைய நீதிக் கவிதைகள், சித்தர்பாடல் அளவு

ஆற்றலுடன் வெளிப்படவில்லை என்றே சொல்லலாம். குறிப்பாக, சமயப்பண்பாட்டுத் தொடர்பான நீதிக்குரல்கள் ஆற்றலுடன் இல்லை என்றே சொல்லலாம். இருக்கும் சில குரல்களும் சித்தர்கள் பாடல்கள் முன், இரண்டாம் நிலையையே பெறமுடியும்.

கம்பனின் கொள்கைப்புனைவு ஒரு முக்கிய நிகழ்வு. காப்பியம், வியப்புநிலைகளை உள்ளடக்கியதுவே ஆகும், வியப்பு இடம்பெறும் நிலைகளிலெல்லாம் கற்பிதப்புனைவுகளுக்கு இடம் உண்டு. கம்பனும் ஓர் கொள்கை உலகைக் கற்பனையாக உருவாக்கி மகிழ்ந்து கவிதையிலும் ஆக்கித்தந்துள்ளான். ஆயினும் மானிடரின் நுட்பமான உளக்கூறுகளுடன் காப்பியக் கவிதையை நடத்திச் செல்வதால் கனவுத்தன்மை கம்பனிடம் மேலோங்கிவிடவில்லை. தன்னுணர்ச்சிப்பாங்கும், நாடகியமும் கம்பனிடம் வலுவான வேறு கூறுகளாக நின்று, முற்றிலும் கனவுருவாக வியப்புக்கதையாக (Romance)—மாறிப்போய்விடாமல், காப்பிய உருவைத் தோற்றுவித்துவிடுகின்றன.

தேசிய உணர்வு கிளர்ந்தெழுந்த இருபதாம் நூற்றாண்டுப் பின்னணியில் தனிமனிதனின் வெளியீட்டுத் திறனுக்கான விடுதலை அதிகமானபோது, கனவுகளும் கற்பனைகளும் பொங்கிப்பெருகி, கம்பனிடம் இருந்ததுபோன்ற கொள்கை உணர்வோட்டங்களும் உருவாகிப் புதிய வியப்புநிலைக் கவிதைகள் (Romantic Poems) எழுதப்பெற்றன எனலாம். பாரதி, பாரதிதாசன், வானம்பாடி—கவிதைகளில் வியப்புநிலையே அடிநாதம் எனலாம். கட்டற்ற தன்னுணர்ச்சி, தாய்நாட்டுப்பற்று, சமூகவிடுதலை, தன்னிரக்கம் —ஆகிய பல்வேறு மனவோட்டங்களிடையே, சமூகநீதிபற்றிய கற்பிதமான—அல்லது மிகவேகமான கவிதைகள் கூவலாக வெளிப்படலாயின.

பாரதி பாரதிதாசனைவிட மேலும் அதிகக் கட்டமைப்புடனும் கனவுருக்களுடனும் வானம்பாடிக் கவிதைகள் தோன்றலாயின. இத்தகைய கவிதைகள் சமூகநீதிபற்றிய பொதுவான கூவல்களையும், புனைவுகளையும் கொண்டிருப்பன; இவற்றுடன் தத்துவார்த்த அறிவு இழைபாய்ச்சிக் கொள்ளும்போது, கனவுகள் உதறப்பட்டு, மாறுதலைநோக்கிய, ஒருவகையான புரட்சிக்குரல்கள் எழுகின்றன.

இத்தகைய வேறுபட்ட நிலைகள் ஓரேகாலத்தில் நிகழலாம்; ஏன், ஓரே கவிஞரிடம்கூட நிகழலாம். ஏனெனில் இவற்றிற்கான

கவித்துவ அடிப்படை, குறிப்பிட்ட ஒருவகையான மன நிலையே. இதுபற்றி (Horace Gregory) ஓரேஸ் கிரீகரி என்பவர் இவ்வாறு விளக்குகிறார் :

"அற்புத மனக்கூறு, ஒரு பாதுகாப்பற்ற உணர்வாயும் நிறை வடையாத உணர்வாகவும் பொறுமையற்ற உணர்வாகவும் இருப் பது. எனவேதான் அவை, நூதனமான உருக்களில் வடிவம் தேடு கின்றன. இதன்விளைவாகவே சில எல்லைகளையும் மீறுகின்றன. கற்பிதமான நூதனக்கற்பனைப் பயணங்களில் ஈடுபடுகின்றன."[1]

இருபதாம் நூற்றாண்டுப் புதிய மக்களாட்சித்தேர்தல்—தகவல் தொடர்புச் சூழல்களில், படித்த நடுத்தரமக்களின் வேகமான— விரைந்த, வேட்கைமீதூர்ந்த உணர்வோட்டங்களின் விருப்ப நிறை வாகவே இத்தகைய வியப்புநிலைக் கவிதைகள் உருவாயின. ஆனால், சமூகநீதிபற்றிய அலசல் (analysis) மனதளத்தில் சிறப் பிடம் பெறும்போது, கவித்துவ வெளியீட்டில் நடப்பியலை நடப் ப னுபவங்களோடும் காட்சி ஆக்கங்களோடும் சொல்ல முனையும் நிலை ஏற்படுகிறது. எளிமையான, நேரடியான கூரிய சொற்களும் வாழ்க்கைக்காட்சிகளும் வெளிப்படுகின்றன. இங்கும் கூட, கவிஞ னின் ஆளுமைக்கேற்ப சொல்லிடுதலை மீறிய படிமவியல் ஆக்கங் களும் நிகழும். ஆயினும், இத்தகைய நிலைகளில் ஆழ்ந்த நம்பிக் கை உணர்வோட்டமும், குறிப்பாகச் சமூக அநீதிகளை உணர்த்திக் காட்டுகின்ற போக்கும் அமைந்திருக்கும். சொற்களாக வெளிப் படுத்தல், படிமவியலாக வெளிப்படுத்தல் என்ற இருநிலைகளிலும் சமூகநீதிக் கவிதைகள் ஆற்றலுடன் அமையமுடியும். இங்கே இந்த இருநிலைகள் காரணமான தரவேறுபாட்டுக்கு இடமில்லை.

---

1. Spiritual Problems in Contemporary Literature P. 37.

[The romantic temper, so often and so grievously misinterpreted and not more by others than its own, is an insecure, unsatisfied, impatient temper which sees no fit abode here for its ideas and chooses therefore to behold them under insensible figures. As a result of this choice, it comes to disregard certain limitations. Its figures are blown to wild adventures lacking the gravity of solid body and the mind that has conceived them ends by disowning them.]

ஆனால், இந்நிலைகள் சார்ந்த கவிதைகளின் வெளியீட்டுத்திறன் காரணமாகத் தரவேறுபாடு அமையலாம். இவற்றில், சொற்களாக வெளிப்படுதல் என்பதில் எள்ளல் முக்கியமானது.

இந்நிலைகளில். சமூகச்சிதைவுகளைக் காட்டுதல்கூட சமூக நீதியின் எங்கும் பரவிய நிலையை, ஆவணப்படுத்திக்காட்டுவது போன்ற ஒரு கலைநுட்பமே எனலாம். சிதைவுகளை எழுதுவது, சிதைவுகளைப் படிமநுட்பங்களோடு குறிப்பாக எழுதுவது என்ப தெல்லாம், சமூக அநீதியின் ஆழ்ந்த வேர்களை நுட்பமாக மறை முகமாக உணர்த்துகின்ற கவிதைச் சான்றுகளே ஆகும். சமூக உணர்வுடைய திறனாய்வாளன் / ஆராய்ச்சியாளன் இப்படித்தான் அணுகிப்பார்க்கவேண்டும். இவற்றை, நம்பிக்கையற்ற அக உளைச் சல்கள் என ஒதுக்குவது, சமூக உணர்வுகள் பற்றிய ஆழ்ந்த புலப் பதிவின்மையைக் காட்டக்கூடியது.

தமிழ்ச் சமூகத்தில் தொடர்ந்துவரும் சமூக - பண்பாட்டு இழை யூடே, சமூகநீதிக்கான குரல்களும் தொடர்ந்து வருகின்றன. இருப தாம் நூற்றாண்டில், இக்குரல்கள், இம்முடிவுரையில், சுருக்கமாக எடுத்துக்கூறப்பெற்றுள்ளபடி பல்வேறு தடங்களில் பதிவுற்று, கவித்துவ ஆளுமைக்கேற்ப, சில முறைமைகளில் வெளியாகி உள்ளன.

ஒருவகையில் பார்த்தால், இக்கவிதைகள் சமூக நிகழ்வுகள்; இன்னொருவகையில் பார்த்தால் கவிஞர்களின், கவித்துவ ஆளுமை கள். இவை இரண்டுக்குமான மொழியின் தடமே சமூகநீதிக் கவிதையின் கோட்பாடு. இவ்வாறு கோட்பாட்டு முறையிலான ஆராய்ச்சி அணுகுமுறையில், இருபதாம் நூற்றாண்டுக் கவிதை களை, ஓரளவு அணுகிப்பார்க்கும் முயற்சியே இந்தச் சிறு அறிமுக நூல்.

## கருவி நூற் பட்டியல்


அகழி, தேவதேவன், கனவு, செகந்திராபாத், 1988.

அன்று வேறு கிழமை. ஞானக்கூத்தன், இலக்கியசங்கம், சென்னை, 1973.

ஆக்டோபஸும் நீர்ப்பூவும், சிவப்பு ரோஜா பதிப்பக வெளியீடு, பாளையங்கோட்டை, 1972.

ஆகஸ்டும் அக்டோபரும், பரிணாமன், தமிழ்நாடு கலை இலக்கியப் பெருமன்றம், மதுரை, 1974.

ஆத்மாநாம் கவிதைகள், பிரம்மராஜன் (தொகுப்) தான்ய & பிரம்மா வெளியீடு, ஊட்டி, 1989.

இவர்கள் காத்திருக்கிறார்கள், சூர்யகாந்தன், இலக்குமி நிலையம் சென்னை, 1983.

இன்குலாப் கவிதைகள், கார்க்கி வெளியீடு, சென்னை, 1972.

உள் வாங்கும் உலகம், விக்ரமாதித்யன், தமிழ்ப் புத்தகாலயம், சென்னை, 1987.

ஊசிகள், மீரா, மீனாட்சி புத்தக நிலையம், மதுரை, 1974.

ஊருங்காலம், விக்ரமாதித்யன், தமிழ்ப் புத்தகாலயம், சென்னை, 1984.

எட்டயபுரம், கலாப்ரியா, அன்னம், சிவகங்கை, 1982.

எதிர்பாராத முத்தம், பாரதிதாசன், செந்தமிழ் நிலையம், இராமச்சந்திரபுரம், 1972.

என் கிராமத்து மண்ணும் கொஞ்சம் கவிதைகளும், பாப்ரியா, நர்மதா, சென்னை, 1985.

ஒலிக்க மறந்த தண்டோராக்கள், தனஞ்செயன், ஆ., உதயம், பூம்புகார், 1990.

கண்ணீர்ப்பூக்கள், மேத்தா மு., வானம் பாடி வெளியீடு, கோயம்புத்தூர், 1974.

கறுப்பு மலர்கள், காமராசன் நா., பாவைப்பதிப்பகம், சென்னை, 1971.

காளமேகம் பாடல்கள், புலியூர்க்கேசிகன் (தொகு) பாரி நிலையம், சென்னை, 1973.

காற்றின்பாடல், சமயவேல், கற்பகவெளியீடு, தூத்துக்குடி, 1987.

கிழிசல்கள், கந்தர்வன், அகரம், சிவகங்கை, 1981.

சலனம், சிவசுப்பிரமணியன், என். & முத்துக்கிருஷ்ணன், கே. (தொகுப்), பாளையங்கோட்டை, 1977.

சித்தர் பாடல்கள், பூம்புகார் பிரசுரம், சென்னை, 1979.

சுயம்வரம் மற்றும் கவிதைகள், கலாப்ரியா, மீட்சிபுக்ஸ், ஊட்டி, 1985.

சோலைக்குயில்கள், சென்னை புக்ஸ், சென்னை, 1987.

தணிகைச் செல்வன் கவிதைகள், முற்போக்கு இலக்கியப்பதிப்பகம், மதுரை, 1975.

திருவருட்பா பாராயணத்திரட்டு, புலியூர்க் கேசிகன் (தொகு), தஞ்சாவூர், 1964.

பதியங்கள், பொன்மணி, தமிழ்நாடு கலை இலக்கியப் பெருமன்றம், மதுரை, 1977.

பாரதிதாசன் கவிதைகள், மணிவாசகர் நூலகம், சிதம்பரம், 1993.

பாரதிதாசன் கவிதைகள், மணிவாசகர்பதிப்பகம், சிதம்பரம், 1992.

பாரதியார் கவிதைகள், பாரதி நிலையம் வெளியீடு, சென்னை, 1987.

பிச்சமூர்த்தி கவிதைகள், எழுத்து பிரசுரம், சென்னை, 1975

புதுக்குரல்கள், எழுத்து பிரசுரம், சென்னை, 1973.

புது நானூறு, கோவேந்தன் த., புதுமைப் பதிப்பகம், சென்னை, 1985.

புறநானூறு, மர்ரே பதிப்பு

மணிமேகலை, கழக வெளியீடு, சென்னை, 1971.

மலரும் மாலையும் தேசிகவிநாயகம் பிள்ளை, கவிமணி, பாரிநிலையம், சென்னை, 1973.

மனிதனைப் பாடுகிறேன், திருமூர்த்தி, வெ. நா, நியு செஞ்சுரி புக் ஹவுஸ், சென்னை, 1964.

மாரிக்கால இரவுகள், பாரதி புத்திரன், அருவி, சென்னை, 1990.

முப்பட்டைநகரம், இந்திரன், யாளிபதிவு வெளியீடு, சென்னை, 1991.

முரண், தேவமகள், அகரம், சிவகங்கை, 1981.

மூவர் தேவாரம், ஸ்ரீ காசிமடம் வெளியீடு, திருப்பனந்தாள், 1968.

மேல் நோக்கிய பயணம், அருப்பிரமிள், இன்னர் இமேஜ், கிராப்ட்ஷொப், சென்னை, 1980.

யுத்தகாண்டம், முல்லை அமுதவன், காவ்யா, பெங்களூர், 1989.

வரைபடம் மீறி, அப்பாஸ் சாமிவெளியீடு, கோயில்பட்டி, 1990.

விடியும் வரைதான் காவ்யன், காவ்யா, பெங்களூர், 1989.

விடைபெறா விநாடிகள், விஜயலட்சுமி இ. சகுந்தபாரதி திருவையாறு, 1984.

வெளிச்சங்கள், வைகறை கோயம்புத்தூர், 1973.

ஜீவாவின் பாடல்கள், நியுசெஞ்சுரி புக் ஹவுஸ், சென்னை, 1968.

## துணை நூற்பட்டியல்

அக்டோபர் புரட்சியும் தமிழ் இலக்கியமும், இரகுநாதன், நியு செஞ்சுரிபுக் ஹவுஸ், சென்னை, 1977.

இந்தியப் பொருளாதாரம், மெதவோய். அ. இ, முன்னேற்றப் பதிப்பகம். மாஸ்கோ, 1986.

இருபதாம் நூற்றாண்டுத் தமிழ்க் கவிதைகளில் மார்க்சியக் கொள்கைகளின தாக்கம், தான்யா கோ, ஐந்திணைப் பதிப்பகம், சென்னை, 1988.

இலக்கியத்தில் சோஷலிசம், சிவஞானம் ம.பொ, இன்பநிலையம், சென்னை, 1965.

உயர் எண்ணங்கள், பெரியார் ஈ. வெ.ரா, சுயமரியாதைப் பிரச்சார வெளியீடு, திருச்சி, 1972.

கம்யூனிசம் விடுதலையின் இலக்கணம், நாகராசன், எஸ்.என், பரிமாணம் வெளியீடு, கோயம்புத்தூர், 1982.

கலையும் இலக்கியமும். ஜீவானந்தம், ப. நியுசெஞ்சுரி புக்ஹவுஸ், சென்னை, 1967.

சித்தர்கள் கண்ட விஞ்ஞானம், சிதம்பரனார் சாமி., இலக்கிய நிலையம், சென்னை, 1974

தமிழ்க்கவிதைகளில் சமுதாயச் சிக்கல்கள, யோகீஸ்வரன். டி. நீலாபதிப்பகம், சென்னை, 1985.

தமிழகவரலாறு, மாரியப்பன். அ. காவ்யா, வெளியீடு, பெங்களூர். 1984.

தாயுமானசுவாமிகள் : வாழ்வும், வாக்கும், நடராஜன், அ.லெ. கஸ்தூர்பா காந்தி கன்ய குருகுலம். வேதாரண்யம், 1980.

நவீன இலக்கியத்தின் அடிப்படைகள், கைலாசபதி, க. மக்கள் வெளியீடு, சென்னை, 1980.

பொற்காலங்கள், சிவசுப்பிரமணியன், ஆ. கார்க்கி நூலகம், சென்னை, 1981.

மாக்சிய அழகியல்: ஒரு முன்னுரை, சச்சிதானந்தன், (தமிழில் சுகுமாரன்) மீட்சிபுக்ஸ், ஊட்டி, 1985.

வள்ளலார் கண்ட ஒருமைப்பாடு, சிவஞானம், ம.பொ, இன்ப நிலையம், சென்னை, 1967.

Crisis in English Poetry, Vivian de Sola Pinto, Hutchinson University Library, London, 1972.

Indian Movements; Some Aspects of Dissent Protest and Reform. Malik S C. (Ed) Indian Institute of Advanced Study. Simla. 1918.

Marxism and Literary Criticism, Terry Eagleton, Methuen & Co. Ltd London, 1981.

October Revolution Impact on Indian Literature Qamar Rais (Ed.) Sterling Publishers, New Delhi, 1978.

On Art and Literature, Marx—Engels, Progress Publishers, Moscow, 1976.

Rural Sociology, Desai, A.R, Popular Prakashan, Bombay, 1969.

Social, Cultural and Economic History of India, Raychoudhry S.C., Surjeet Publications, Delhi, 1980.

Social Justice and Equality in India, Bhatnagar S. Soni R.N.& Raj Khanna (Ed), Ess Ess Publications, New Delhi, 1987.

Sociology, (Experiencing A Changing Society) George Ritzor, Kenneth C.W Kammeyer, Norman K. Yetman, Allyn and Bacon, London, 1979.

Spiritual Problems in Contemporary Literature, Stanely Romaine Hopper (Ed) Harper & Brothers, New york, 1957,

Theory of Literature, Rene Wellek & Austin Warren, Penguin books, London, 197J.

# சிறப்புச் சொல்லகராதி

(எண்—பக்க எண்)



**உலகத் தமிழாராய்ச்சி நிறுவனம்**

சி.ஐ.டி. வளாகம், தரமணி, சென்னை-600113
தொலைபேசி : 2350992

## அமரர் ஆதித்தனார் அறக்கட்டளை வெளியீடுகள்

அமரர் ஆதித்தனாரின் புதல்வர் திரு. சிவந்தி ஆதித்தன் அவர்களால் 1987இல் நிறுவப்பட்டது இவ்வறக்கட்டளை. இதழியல் சார்புடையன சொற்பொழிவுப் பொருளாய் அமைகின்றது.

### இதழாளர் ஆதித்தனார்

முனைவர் அ. மா. சாமி; சூலை 1990; VII+194; ரூ 26

இவ்வறக்கட்டளையின் முதற்சொற்பொழிவு ஆதித்தனாரின் தமிழ்ப்பணியைத் தமிழுலகிற்கு எடுத்துக் காட்டுவதாய் அமைய வேண்டும் என்ற நோக்கின் நிறைவாக இந்நூல் எழுந்துள்ளது. ஆசியாவிலேயே மிக அதிகமாக விற்பனையாகும் நாளிதழ் எனப் பெருமை கொண்ட 'தினத்தந்தி'யை உருவாக்க மேற்கொண்ட முயற்சிகளும் வளர்ப்பதில் பெற்ற இன்னல்களும், காட்டிய சலியாத உழைப்பும் மிகத்தெளிவாக விளக்கப்பட்டுள்ளன.

### கம்பன் எழுத்தச்சன் இராமாயணங்கள்

முனைவர் ப. பத்மநாபன்தம்பி; சூன் 1993; VI+160; ரூ 26

கம்பன் இராமகாதையை மலையாள எழுத்தச்சனின் அத்யாத்ம ராமாயணத்தோடு அக, புற நிலைகளில் விரிவாக ஆராயப்பட்டுள்ள நூல்.